# தோடி அடகு




எல்லார்வி



...முத நிலையம்

# தோடி அடகு

(சிறு சம்பவங்கள்)




எல்லார்வி



அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்

தேனாம்பேட்டை : : சென்னை-18

அமுதம் (மலிவு) 8
முதற் பதிப்பு—ஜனவரி, 1963
உரிமை பதிவு






விலை 30 காசு

## நன்றி

இந்த வரிசையில் இது பத்தாவது நூல். இதற்கு முன் செம்பைச் செல்வம், அரியக்குடி, பிடாரம் கிருஷ்ணப்பா, ராஜமாணிக்கம் பிள்ளை, மைசூர் சௌடையா ஆகிய முழு வரலாற்று நூல்களும், கலை மணிகள் என்ற பெயரில் எட்டு இசை மேதைகளின் வரலாற்றுச் சுருக்கமும் நிகழ்ச்சிகளும் அடங்கிய நூலும், எங்கே, அண்ணு! எங்கே?, குறித்த நேரம், தோற்றவருக்குப் பரிசு—ஆகிய நிகழ்ச்சித் தொகுப்புக் களும் வெளி வந்துள்ளன. அனைத்தும் அமோகமான பாராட்டைப் பெற்றன; பாராட்டை மட்டுமே பெற்று வருகின்றன. ஆகவே, அடுத்து இன்னும் பல மேதை களைப் பற்றிய நூல்கள் அச்சேறத் தயாராக இருந்தும் செயல்படத் தயக்கமாக இருக்கிறது. திருவருள் துணை நின்ருல் ஏனைய நூல்களும் வெளிவரலாம்.

இந்நூலில் உள்ள நிகழ்ச்சிகளைக் கூறி உதவிய அறிஞர் பெருமக்களுக்கு என் மனமுவந்த நன்றியும் வந்தனமும்.

விஜயவிலாசம்,
சென்னை-4
14—1—63

எல்லார்வி
பொங்கல் திருநாள்

நேஷனல் ஆர்ட் பிரஸ், தேனும்பேட்டை, சென்னை-18

## உள்ளுறை

| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|


1A

# தோடி அடகு

## 1. தோடி அடகு

(சுமார் - 1860)

அடைமொழிகள் பலவிதம். இசை உலகிலும் அது உண்டு — 'கனம் கிருஷ்ணையர்', 'பல்லவி நரசிம்ம ஐயங்கார்'—இப்படிப் பலவகை. சிலர் சில ராகங்களைச் சிறப்பாகப் பாடுவதை எண்ணி அவர்கள் பெயரைக் குறிப்பிட அந்த ராகங்களையே அடைமொழியாக உபயோகிப்பது உண்டு.

மைசூர் மகாராஜா ஜி. என். பாலசுப்பிரமணியத்தை முத்தையா பாகவதரிடம் 'ஷண்முகப்ரியா' என்று குறிப்பிட்டார். நாகசுர சக்கரவர்த்தி திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையை, 'தோடி ராஜரத்தினம்' என்று குறிப்பிடுவதுண்டு.

ராஜரத்தினம் பிள்ளைக்கு முன் தோடியை மிகச் சிறப்பாகப் பாடி அந்த ராகத்தின் பெயரை அடைமொழியாகப் பெற்ற வித்துவான் ஒருவர் இருந்தார். அவர் தஞ்சை அரசவையின் இசைப் புலவர். மன்னர் அடிக்கடி அவரைத் தோடி பாடச் சொல்லி ரசிப்பது வழக்கம்.

அவர் மிகுந்த செலவாளி. அவரிடம் முரண்பாடுடைய இரு இயல்புகள் வேரோடியிருந்தன. யாரிடமும் உதவி என்று கை நீட்டமாட்டார்; ஆனால் கூசாமல் கடன் வாங்குவார். மன்னரின் ஆதரவு இருந்தும் அவர் பெருங் கடனாளியாகவே இருந்தார். அவருடைய உடைமைகள் முழுவதும் அடைமானப் பட்டிருந்தன.

ஒருசமயம் தவிர்க்க முடியாத செலவுக்குப் பணம் தேவையாக இருந்தது. பல இடங்களில் முயன்றார். கிடைக்கவில்லை. முடிவில் பரிசயமுடைய லேவாதேவிக் கடைக்காரரிடம் சென்றார். அவர், "ஏதாவது கொடுத்தால் பணம் தருகிறேன்" என்றார். தம்மிடம் எதுவுமே இல்லை என்று வித்துவான் கையை விரித்தார்.

"உம்முடைய தோடி ராகத்தை என்னிடம் அடகு வையும்; பணம் தருகிறேன்" என்றார் வியாபாரி.

வித்துவானுக்கு ஒருபுறம் கிலேசம், மறுபுறம் வியப்பு.

"ராகத்தை அடகு வைப்பதா? அது எப்படி?"

"நீர் தோடி பாடுவதில் தேர்ந்தவர். மன்னர் முதல் எல்லா ரசிகர்களும் உம்மிடம் அதைக் கேட்கப் பிரியப் படுகிறார்கள். ஆகவே உம்வரை அது உயர்ந்த பொருள். வட்டியும் முதலுமாய் என் கடன் தீருகிற வரையில் நீர் தோடி பாடவே கூடாது."

"அதனால் உமக்கு நன்மை என்ன?"

"பொறுப்புடன் நீர் கடனை அடைப்பீர்; அல்லது உம் ரசிகர்கள் அதற்கு வகை செய்வார்கள். என் பணம் கட்டாயம் திரும்பும். இப்போதைக்கு உமக்கும் பணம் கிடைக்கும்; எனக்கும் தொழில் நடக்கும்."

வித்துவான் வியாபாரியின் போக்கை வியந்து கடனைப் பெற்றுத் திரும்பினர்.

ஏறக்குறைய ஒருமாத காலமாக மகாராஜா ஜாடையாகவும் நேரிடையாகவும் பல முறை கேட்டும் வித்துவான் தோடி பாடவில்லை; மற்றவையெல்லாம் பாடினர்.

ஒரு நாள் மகாராஜா மிகவும் வற்புறுத்தவே வித்துவான் நிலைமையை விளக்கிவிட்டார். மன்னர் பதைத்தார்.

"நீங்கள் சுகவாழ்வில் இருக்கிறீர்கள் என்று நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். பொருள் தேவையென்றால் இங்கே கேட்டுப் பெறலாகாதா?" என்று உரிமையுடன் கடிந்தார். உடனே பொருளை அனுப்பித் தோடியை மீட்கச் செய்தார். வித்துவானை வளவாழ்வில் வைத்து அகமகிழ்ச்சி பெற்றார்.

அந்த வித்துவான் பெயர் தோடி சீதாராமையா.

*அறிவித்தவர் : திரு. ஜி. என். பாலசுப்பிரமணியம்.*

## 2. தேள் தான்
### (1865)

அவை கூடியிருந்தது. மூர்க்கர் பாவா வந்து கதை சொல்ல அமர்ந்தார். பிரார்த்தனைக் கீதங்கள் முடிவடைந்தன. அவர் கதை சொல்லத் தொடங்கினார்.

அப்போது அவர் முகம் குபீரென்று சிவந்தது. அவரே நல்ல சிவப்பு; அப்போதைய தோற்றம் ரத்தச் சிவப்பாக மாறிவிட்டது. உடனிருந்த மாணவர் இதைக் கவனித்தார். காரணம் விளங்காது தவித்தார்.

காலட்சேபம் முடிவடைந்தது. பாவா இருப்பிடத்தை அடைந்தார்; உடைகளைக் களைந்தார். தலைப் பாகைக்குள்ளிருந்து பெரிய கருந்தேள் ஓடிற்று!

அதைக் கண்ட மாணவர், "குருமகராஜ்!... தேள்!... தேள்!..." என்று கூவினார்.

பாவா சிரித்துக்கொண்டே, "தேள் தான்" என்றார். பிறகு, "கதை செய்கிறபோது வலி தெரியவில்லை; இப்போது..." என்று தலையைத் தடவிக் கொண்டார். தொடர்ந்து, "நான் இதைப்பற்றிக் கவலைப்படவில்லை; இது ஒரு பெரிய துன்பமாகவே எனக்குத் தோன்றவில்லை. ஆனால்...இது நல்ல சூசகம் அல்லவே என்றுதான் கவலைப்படுகிறேன். எனக்கு ஏதோ பெரிய கேடு வரப்போகிறது!" என்று மாணவரிடம் கூறிய பாவாஜி அப்படியே அமர்ந்து கடவுள் வழிபாட்டிலே லயிக்கத் தொடங்கினார்.

## 5

மறு வாரத்தில் ஒரு நாள்.

"குரு மகராஜ்!...குரு மகராஜ்!..." என்று அலறி யடித்து ஓலமிட்டவண்ணம் ஓடிவந்த மாணவர் ஓவென்று அழத் தொடங்கினர். பாவா திட்டை கலைந்து எறிட்டுப் பார்த்தார்.

மாணவர் கையில் தந்தி! அது துயரச் செய்தியைத் தாங்கி யிருந்தது. பாவாவின் புதல்வர் பரலோகம் போய்விட்டார்!

செய்தியறிந்து பாவா நெடுமூச்செறிந்தார். "எட்டு நாளைக்கு முன்பு தலையில் தேள் கொட்டியபோது என்ன சொன்னேன்? அது பலித்துவிட்டது!"—துயரத்தை உள்ளடக்கி இவ்வாறு கூறியவர் உடனே ஊருக்குப் புறப்பட்டார்.

எவ்வளவுதான் பக்திமானுக இருந்தும் புத்திர சோகம் அவருடைய சித்தத்தைக் குழப்பிவிட்டது. அதற்குமேல் அவர் கதை நிகழ்த்தவும் இல்லை; பல காலம் உயிர் வாழ்ந்திருக்கவும் இல்லை.

'பரம பக்த சிரோமணியாகிய அவருக்கு, மேல் உல கத்தில் நிச்சயமாய் நல்ல இடமே கிடைத்திருக்கும்' என்றே அவரை அறிந்தவர்கள் பேசிக்கொண்டார்கள்.

*அறிவித்தவர்: தேவகோட்டை திரு. சங்கர பாகவதர்.*

## 3. சமயத்தில் வாராத பத்தர்!
### (1870)

தஞ்சாவூர்க் கிருஷ்ணபாகவதரின் கதைகளுக்குப் பஞ்சாபகேச பாகவதர், துரைசாமிப் பத்தர் இருவரும் பின் பாட்டுப் பாடி வந்தார்கள். துரைசாமிப் பத்தர் குரல் வளத்திலும் இசைப் புலமையிலும் சிறந்தவர். அவருடைய பாட்டுக்காகவே ரசிகர்கள் அதிகமாகக் கூடுவார்கள். ஆனால் அவர் சில சமயங்களில் நேரங்கழித்து வருவார்; வேறு சில சமயங்களில் வராமலே இருந்து விடுவதும் உண்டு.

தஞ்சையில் கிருஷ்ண பாகவதரின் நந்தனார் காலட்சேபம். பஞ்சாபகேச பாகவதர் ஊரில் இல்லை. கிருஷ்ண பாகவதர் துரைசாமிப் பத்தரிடம், "இன்றைய நிகழ்ச்சிக்கு உரிய நேரத்தில் தவருமல் வந்து சேர வேண்டும்'' என்று பலமுறை கண்டித்துக் கூறியிருந்தார். ஆனால்...

துரைசாமிப் பத்தர் வழக்கம்போலவே நடந்து கொண்டார். வேறு வழி இன்றி, பின் பாட்டின் துணை இல்லாமலே கிருஷ்ண பாகவதர் கதை செய்யத் தொடங்கினார்.

நந்தனார் தரிசனத்திற்கு வந்திருப்பதைப் பகவான் அறிவிக்கும் கட்டம். அந்த இடத்தில் ஒரு பாடல். "ஒரு நாளும் வாராத பக்தன்' என்ற அந்தப் பாடலைக் கிருஷ்ண பாகவதர் மிக உருக்கமாகப் பாடிக்கொண்டிருந்தார்.

அப்போது துரைசாமிப் பத்தர் பரக்கப் பரக்க ஓடி வந்தார். பக்கவாட்டில் வந்த அவரைப் பாகவதர் திரும்பிப் பார்த்தார். சட்டென்று; பாடலைச் சிறிது மாற்றி,

"சமயத்தில் வாராத பத்தர்; இந்த—துரைசாமிப் பத்தர்" என்று பாடினார்.

அவையில் கொல்லென்று சிரிப்பொலி எழுந்தது.

துரைசாமிப் பத்தரும் சிரித்துக்கொண்டே குனிந்த தலை நிமிராமல் பாகவதருக்குப் பின்புறம் சென்று பாடலை 'வாங்கி'ப் பாடத் தொடங்கினார்.

அன்றுமுதல் அவர் ஒருபோதும் நிகழ்ச்சிக்குத் தாமதித்து வந்ததில்லை.

அறிவித்தவர்: தேவகோட்டை திரு. சங்கர பாகவதர்.

## 4. வெண்ணெய் வைத்தியம்

(1915)

"ஆ!...அப்பா!...அம்மா!..."—இப்படி முனகல் சத்தம் மெதுவாகக் கேட்டுக்கொண்டே இருந்தது. திண்ணையில் எல்லாரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். வரவர முக்கலும் முனகலும் அதிகரித்தன.

"ஆண்டவனே!...உடம்புக்கு என்ன?"

"ஓ!...நீங்கள் தூங்கவில்லையா?...எனக்கு...நீர்க் குத்தல் உபத்திரவம் கடுமையாக இருக்கிறது. வீடாக இருந்தால் வாய்விட்டு அழுதிருப்பேன்."

"வீட்டிலேயே இருந்திருந்தால் இந்தத் துன்பமே வந்திருக்காதே! ஊருக்கு ஊர் ரெயில் பிரயாணம். ரெயில் சூடு சாமானியமா? இரவுகளில் கண்விழிப்பு! இடைவிடாமல் கச்சேரிகள்! பாடுவது எளிதான செயலா?...திருஷ்டி விழாமல் இருக்க வேண்டுமே என்று நான் முருகனை வேண்டிக்கொண்டிருக்கிறேன்... ம்...சரி, இரவு எப்படியோ பல்லைக் கடித்துப் பொறுத்துக் கொள்ளுங்கள்; விடிந்ததும் முதல் காரியமாகப் பரிகாரம் செய்கிறேன்."

விடிந்தது. எலுமிச்சம் பழத்தளவு வெண்ணெயுடன் வந்தார் தட்சிணாமூர்த்தி பிள்ளை. விசுவநாதையர் அதை உட்கொண்டு நோயிலிருந்து விடுதலை பெற்றார்.

"அன்றுமுதல் அந்த மேதையின் உபதேசப்படி அடிக்கடி வெண்ணெய் உட்கொண்டு வந்ததால்தான் என்னையும் என் பாட்டையும் என்னால் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது" என்கிறார் மகாராஜபுரம் விசுவநாதையர்.

*அறிவித்தவர்: மகாராஜபுரம் திரு. விசுவநாதையர்.*

## 5. "இங்கே பதநி ஏது?"
(1915)

தூறும்பேட்டை ஜமீனில் வைபவம். ஏற்பாடுகள் மிகப் பிரமாதம். ஜமீன்தார் சிறந்த சங்கீத ரசிகர். குறிப்பாக, நாகசுர இசையில் அதிக லயிப்பு உடையவர். கீரனூர்ச் சகோதரர்களில் ஒருவரான சின்னத்தம்பி பிள்ளையின் தகப்பனார் கோவிந்த பிள்ளையை ஆஸ்தான வித்துவானாக அமர்த்திக்கொண்டு ஆதரித்துக் கௌர வித்தார். கோவிந்த பிள்ளைக்குப் பிறகு கீரனூர் முத்துப் பிள்ளை அங்கே ஆஸ்தான வித்துவானாகப் பதவி ஏற்றார்.

வைபவத்தில் கீரனூர் முத்துப் பிள்ளையின் நாகசுர இசையோடு பல்லவி மேதை செம்பொன்னார் கோயில் ராமசாமி பிள்ளையின் நாகசுர இசைக்கும் ஏற்பாடு ஆகி யிருந்தது.

ராமசாமி பிள்ளைக்கு எதிர்பாராத வகையில் ஏதோ அசந்தர்ப்பம். எனினும் சமாளித்து வந்து சேர்ந்து விட்டார். ஆனால் அவர் மனம் மட்டும் அமைதியாக இல்லை.

அந்நிலையில் அவர் வாசிக்கத் தொடங்கினார். பூரி கல்யாணி ஆலாபனம். அது வக்ர வர்ஜ்ய ராகம். ஆரோகணத்தில் நிஷாதம் வர்ஜம். ஆனால் ராமசாமி பிள்ளை நிஷாதத்தைக் கலந்து, மடித்து மடித்து, 'பதநி, பதநி' என்றே வாசித்தார்.

அருகே அமர்ந்திருந்த முத்துப் பிள்ளை ராமசாமி பிள்ளைக்கு மட்டும் கேட்கும்படி, "இங்கே பதநி ஏது?" என்றார். விழிப்படைந்த ராமசாமி பிள்ளை குபீரென்று சிரித்துவிட்டார். (பதனி - ஒரு பானம்.)

அறிவித்தவர்: கீரனூர் திரு. மு. ராமசாமி பிள்ளை.

## 6. பரீட்சையா பாராட்டா?

(1915)

பிடாரம் கிருஷ்ணப்பா சிலமுறை தமிழ் நாட்டிலே சுற்றுப்-பிரயாணம் செய்திருக்கிறார். தம்முடைய கலைத் திறனைப் பலர் அறியச் செய்வதற்காகவும், மற்றவர்களின் ஆற்றலை நேரில் கண்டு கேட்டு அநுபவிப்பதற்காகவும், மைசூரில் பிரசன்ன சீதாராம மந்திரத்தை நிர்மாணிப்பதற்காகவும் இப்படிப் பல நோக்கங்களை எண்ணி அவர் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தார்.

1915இல் அவர் சுற்றுப் பிரயாணத்தின் இடையே கும்பகோணம் வந்து தங்கினார். அவரோடு அவரது மாணவர் சௌடையாவும் மற்றும் சிலரும் வந்திருந்தனர். கிருஷ்ணப்பா எப்போதுமே தனிமையில் எங்கும் செல்வதில்லை.

குடந்தையில் வாழ்ந்துவந்த சத்கதா காலட்சேப மேதை திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகள் ஆண்டு தோறும் ஸ்ரீராமநவமி உற்சவத்தை வெகு சிறப்பாக நடத்தி வந்தார். உற்சவத்தில் பல இசைக் கலைஞர்கள் கலந்துகொள்வர்; சிறப்புற இசைப்பணி புரிவர்.

பிடாரம் கிருஷ்ணப்பா கும்பகோணத்தை அடைந்த போது ஸ்ரீராம நவமி உற்சவ சமயம். சாஸ்திரிகள் அவரை இசைப் பணியில் கலந்துகொள்ள அழைத்தார். அவரும் இசைந்து அங்கே சென்றார். அவருக்குப் பக்க வாத்தியமாக வயலின் இசைப்பதற்காக மாணவர் சௌடையாவும் உடன் சென்றார்.

சாஸ்திரிகள் கிருஷ்ணப்பாவை நோக்கி, "கிருஷ்ணப்பா, உங்கள் சாரீரம் தனிச்சிறப்பு உடையது. மந்தர ஸ்தாயி ஷட்ஜத்திலிருந்து மத்திய ஸ்தாயி ஷட்ஜத்

திற்குள் நீங்கள் கல்யாணி ராகம் பாடிக் கேட்கவேண்டு மென்று நான் ஆசைப்படுகிறேன்'' என்றார்.

கிருஷ்ணப்பா, ''அதற்கென்ன, பாடுகிறேன்'' என்றார். உள்ளுக்குள், 'இவர் நம்மைப் 'பதம்' பார்க்கிறார்' என்று எண்ணிக்கொண்டார். அந்த எண்ணம் ஒரு வேகத்தை உண்டுபண்ணிற்று. அந்த வேகத்தோடு பாடத் தொடங்கினார். சாஸ்திரிகள் கூறிய முறைப் படியே பாடலானார்.

பெரிய அவை. கும்பகோணமே அங்கே கூடி யிருந்தது என்று சொல்லலாம். ரசிகப் பெருமக்களில் தேர்ந்த இசைப் புலமை உடையவர் பலர் இருந்தார்கள். கிருஷ்ணப்பா யாரைக் கண்டும், எதை எண்ணியும் தயங்கவில்லை. சிம்மம்போல் பாடினார். முக்கால் மணி நேர ஆலாபனம். அங்கே கல்யாணி வெள்ளம்போல் பெருக்கெடுத்து நிறைந்தது. சௌடையா சற்றும் சளைக்காமல் வயலின் இசைத்தார்.

நுட்பமான இடங்களில் எல்லாம், 'ஆகா!', 'பேஷ்!', 'பலே!', 'சபாஷ்!', 'த்ஸொத்ஸொ' என்ற சிற்றொலிகள் எங்கெங்கிருந்தோ எழுந்தன.

சாஸ்திரிகளுக்கு வியப்பும் பிரமிப்பும் தாங்கவில்லை. எழுந்தார்; விலை உயர்ந்த சாதரா ஒன்றைக் கொணர்ந் தார்; விரித்துக் கிருஷ்ணப்பாவுக்குப் போர்த்தினார். படபடவென்று கைதட்டி ஆரவாரித்தார். பிறகு கம்பிக் கரை வேட்டி ஒன்றைச் சௌடையாவுக்கு அளித்துத் தட்டிக் கொடுத்துக் கைதூக்கி ஆசீர்வதித்தார். கிருஷ்ணப்பாவை நோக்கி, ''பையனை நன்றாகத் தயார் செய்திருக்கிறீர்கள். வருங்காலத்தில் பிரமாத மாகப் பிரகாசிப்பான்'' என்றார்.

அறிவித்தவர்: மைசூர் திரு. டி. சௌடையா.

# 7. எது கடினம்?

## (1915)

மதுரையில் செல்வர் ஒருவர் இல்லத்தில் திருமண வைபவம். பாட்டுக் கச்சேரி, மேளக் கச்சேரி, பரத நாட்டியம், கதா காலட்சேபம் எல்லாம் உண்டு. அரிகேச நல்லூர் முத்தையா பாகவதரும் கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதரும் அங்கே சந்தித்துக்கொண்டார்கள்.

அப்போது முத்தையா பாகவதர் பாட்டுக் கச்சேரி செய்துகொண்டிருந்தார்; வேதாந்த பாகவதர் கதா காலட்சேபம் செய்துகொண்டிருந்தார். இருவரும் அந்த வைபவத்திலே வினிகைகள் நிகழ்த்தத்தான் வந்திருந்தார்கள்.

நிகழ்ச்சிகள் உரிய காலங்களிலே நிறைவேறின. பாகவதர்கள் இருவரும் விசிராந்தியாக அமர்ந்து உரையாடினார்கள். லோகாபிராமமான பேச்சு.

குயுக்திக்காரர்கள் எல்லாக் காலங்களிலுமே அங்கங்கே இருந்திருக்கிறார்கள். அத்தகைய ஒருவர் அவர்கள் பேச்சிலே குறுக்கிட்டார்:

"பாட்டுக் கச்சேரி உயர்ந்ததா; கதா காலட்சேபம் உயர்ந்ததா?"

"இரண்டும் தனித்தனி முறையிலே உயர்ந்தவை தாம்" என்றார் முத்தையா பாகவதர்.

வேதாந்த பாகவதரும், "ஆம்" என ஆமோதித்தார்.

"இரண்டில் எதைப் புரிவது கடினம்?"

"இரண்டுமே கடினமானவைதாம்."

"எது மிகவும் கடினம்?"

முத்தையா பாகவதர் பதில் சொல்லவில்லை. வேதாந்த பாகவதர், "காலட்சேபம் செய்வதுதான் மிகவும் கடினமான செயல்" என்றார்.

கேள்வி கேட்டவர் முத்தையா பாகவதரை நோக்கி, "இதை நீங்கள் ஏற்கிறீர்களா, மறுக்கிறீர்களா?" என்றார்.

"இதை நான் ஆமோதிக்கிறேன். என்றாலும், பாடுவதும் அப்படியொன்றும் எளிதான செயல் அன்று."

இப்போது வேதாந்த பாகவதர் நேரடியாக முத்தையா பாகவதரிடம் கேட்டார்:

"அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்? வேதம், சாத்திரம், புராணம், தமிழ், இசை முதலிய எல்லாத் துறைகளிலும் அறிவு நிரம்பி, சாதுரியமாகப் பேசும் ஆற்றலும் கூடினால் அல்லவா காலட்சேபத்தில் வெற்றியும் புகழும் கிட்டும்? பாடுவது அப்படி இல்லையே! ஒரு துறை அறிவு போதுமே!"

முத்தையா பாகவதர் உறுதியாகச் சொன்னார்:

"இதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. சுருதி ஞானம், லயஞானம், ஸ்வரஞானம், குரல்வளம், அங்க சேட்டையின்மை, சௌலப்ய குணம் எல்லாம் சேர்ந்தால் தான் பாடும் துறையிலும் வெற்றியும் புகழும் கிட்டும்."

"எனக்கு அது பிரமாதமாகத் தோன்றவில்லை. சிறப்பாக என்னால் பாட்டுக் கச்சேரி செய்துவிட முடியும். உங்களால் காலட்சேபம் செய்ய முடியுமா?"

"ஓ!...செய்து காட்டுகிறேன்."

"நானும் பாடிக் காட்டுகிறேன்."

பின்னாட்களில் முத்தையா பாகவதர் காலட்சேபத் துறையில் ஈடுபட்டதற்கும், வேதாந்த பாகவதர் பாட்டுக் கச்சேரியில் ஈடுபாடு கொண்டதற்கும் வேறு காரணங்கள் இருப்பினும் இது ஒரு முக்கிய காரணம் என்று பெரியோர்கள் சொல்வதுண்டு.

## 8. மண்வெட்டிக் காம்பும் அரிவாள் பிடியும்

(1915)

கும்பகோணம் அழகநம்பி பிள்ளை கலை ஆற்றலில் எத்தனை மேன்மை உடையவரோ அத்தனைக்கு வருவாய் விஷயத்திலும் கருத்து மிகுந்தவர். ஆனால் தகாத ஆசை ஒரு போதும் அவர் உள்ளத்தில் இடம் பெற்றதே இல்லை.

சேலத்தில் பிரமுகர் ஒருவர் வீட்டில் வைபவம். அவர் அழகநம்பி பிள்ளையின் ஆற்றலில் லயிப்பு உடையவர். எந்த வைபவம் நிகழ்த்தினாலும் அதில் கச்சேரி வைப்பார்; அழகநம்பி பிள்ளைதான் மிருதங்கம்.

பிரமுகரிடம் சிக்கன மனப்பான்மை மிகுதி. பழகிப் போன செயல்களில்கூட, 'பேரம்' பேசும் இயல்பினர்.

வைபவம் நடைபெறப் போகிறது என்று கேள்விப்பட்டது முதல் தமக்கு அழைப்பு வரும் என்று அழகநம்பி பிள்ளை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார். அது வீண் போகவில்லை. முக்கிய அலுவலை முன்னிட்டு அந்த ஊருக்கு வந்த பிரமுகர் நேரிலேயே அழகநம்பி பிள்ளையிடம் வந்தார்.

வரவேற்பு, உபசாரம், குசலப் பிரசனம் முடிந்தன. பிரமுகர் அழைப்பை, 'பத்ததி'ப்படி வெளியிட்டார்.

"யாருடைய கச்சேரி?" என்று அழகநம்பி பிள்ளை கேட்டார்.

"கச்சேரி யாருடையதானாலும் மிருதங்கம் அழகநம்பி பிள்ளைதான்" என்று பிரமுகர் சிரித்துக்கொண்டே கூறினார்.

"அது சரி. இருந்தாலும் தெரிந்துகொள்ள வேண்டாமா ?"

"காரைக்குடி சகோதரர்களின் வீணைக் கச்சேரி."

"ஓகோ !...நம்ம சம்மான விஷயம்..."

"மாமூல்படிதான்."

மாமூல் இருவகை—அவர்களிடையே. அழகனம்பி பிள்ளை மற்ற இடங்களில் தோராயமாகப் பெற்று வந்தது அவருடைய மாமூல்; அவருக்குப் பிரமுகர் குறைத்து அளித்து வந்தது பிரமுகருடைய மாமூல். இதைத் தகர்த்துவிட வேண்டும் என்பது அழகனம்பி பிள்ளையின் வெகு நாளைய எண்ணம்.

"மாமூல் இருக்கட்டும்" என்று பேச்சைத் தொடங்கிய அவர் தமக்கு இவ்வளவு வேண்டும் என்று குறிப்பிட்டு ஒரு தொகையை வெளிப்படையாகவே கூறினார்.

பிரமுகர் திடுக்கிட்டார். "இது என்ன, என் மாமூலை யும் உங்கள் மாமூலையும் தாண்டி நிற்கிறதே! போன வாரம் திருச்சியில் ஒரு கச்சேரிக்கு வாங்கினதைப் போல் இரண்டத்தனை கேட்கிறீர்களே !" என்றார்.

"போன வாரம் திருச்சியில் நடைபெற்ற கோனேரி ராஜபுரம் வைத்தியநாதையர் கச்சேரிக்கு வாசித்ததைத் தானே குறிப்பிடுகிறீர்கள்? அதுவும் இதுவும் சரியாகி விடுமா ?"

"ஏன் ?...என்ன வித்தியாசம் ?"

"அங்கே அவர் ஒருவர் பாடினார்; இங்கே இரண்டு பேர் இரண்டு வீணைகளை வைத்துக் கொண்டு வாசிப் பார்களே ! அதனால் இரட்டைப்படி!"

முதலில் திகைத்த பிரமுகர் பிறகு சிரித்தார். பின்னர், "திருச்சியில் பெற்ற தொகையே இருக்கட்டும்" என்ருர்.

"சரி. உங்கள் பிரியம்."

பிரமுகர் சென்ருர். அழகனம்பி பிள்ளை உடன் இருந்தவர்களிடம், "இப்படிப்பட்டவர்களிடமெல்லாம் மண் வெட்டிக் காம்புக்கு மரம் சீவினல்தான் அரிவாள் பிடிக்காவது தேறும்" என்று கூறிச் சிரித்தார்.

## 9. நவயுக துருபத, துரோண, அர்ச்சுனர்கள்

(1915)

மதுரையில் கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதரின் கச்சேரி. இரவு சாப்பாட்டுக்குமேல், மாடியில் தாம்பூலம் தரித்தபடி எல்லாரும் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அன்றைய கச்சேரியின் சிறப்பம்சங்களைப் பற்றிச் சிலர் புகழ்ந்துரைத்தார்கள்.

"பைரவி ராக ஆலாபனம் மிகப் பிரமாதம்!"

இப்படி ஒருவர் கூறியதும், "மேலிடத்துச் சஞ்சாரம் இன்னும் சிறப்பாக இருக்கலாம்" என்று அருகே குரல் கேட்டது. எல்லாரும் திடுக்கிட்டுக் கவனித்தார்கள். இருள் பிரதேசத்தில் யாரோ நின்றிருப்பது தெரிந்தது. "யாரங்கே?" என்று அதட்டினாற்போல் ஒருவர் கேட்டார். உடனே இருளில் நின்ற இளைஞர் வெளிச்சத்திற்கு வந்தார்.

"யாரப்பா நீ?"—பாகவதர் கேட்டார்.

"இசை பயிலும் மாணவன்."

"மேலிடத்துச் சஞ்சாரம் இன்னும் சிறப்பாக இருக்கலாம் என்று சொன்னது நீதானா?"

"ஆமாம்."

"சிறுபையனாக இருக்கிறாய்; கலை பயிலும் மாணவன் என்கிறாய்; மரியாதை தெரியவில்லையே! இத்தனை துடுக்குத் தனமாகப் பேசலாமா?"

"தவறாக நான் எதுவும் சொல்லவில்லையே! என் மனத்தில் பட்டதை அப்படியே வெளியிட்டேன்."

"பிறர் செயலில் குறை கூறுகிருயே, உன்ஞல் சிறப்பாகச் செய்து காட்ட முடியுமா?"

"ஓ!......பாடட்டுமா?"

"பாடு."

இளைஞர் பைரவி பாடிஞர்; விஸ்தாரமாகப் பாட வில்லை. குறிப்பாக, எந்த இடத்தைச் சிறப்பாகப் பாடிக் காட்ட வேண்டுமோ அந்த இடத்தைப் பாடிஞர். "ஆகா! ஆகா!......என்ன உயர்வான சாரீரம்!...எத்தகைய அழகான சஞ்சாரம்!...எவ்வளவு சிறப்பான பிடிகள்!" என்று எல்லாரும் பாராட்டிஞர்கள்.

பாகவதர் கண்களில் நீர் துளும்பிற்று. இளைஞரை ஆரத்தழுவிக் கொண்டார். நாத் தழுதழுக்கச் சொன்ஞர்:

"அப்பனே! சில ஆண்டுகளுக்கு முன் இசை மேதையான பெரியவர் ஒருவர் என் பாட்டில் இதே பைரவியில் இதே இடத்தைச் சுட்டிக் குறை கூறிஞர். 'எங்கே, நீங்கள் பாடிக் காட்டுங்கள்!' என்று மமதையுடன் சொன்னேன். அவருக்குக் குரல் வசதி இல்லை. மனம் நொந்தார். மேலும் அவர் மனத்தை நோக நோகப் பேசினேன். அவர் மன வேதனை என்னைச் சிறுவஞகிய உன்னிடம் காட்டிக் கொடுத்துவிட்டது. அந்த உத்தம காயகமேதை எட்டையபுரம் ராமசந்திர பாகவதர்தாம்."

"தெரியும்; அவர் அந்த நிகழ்ச்சி பற்றி என்னிடம் சொல்லியிருக்கிருர். நான் அவருடைய மாணவன்தான். என் பேர் புஷ்பவனம்!"

"ஆ!......"

பாகவதர் திறந்தவாய் மூடவில்லை. புஷ்பவனம் விடைகொடுத்துக்கொண்டு சென்ருர்.

## 10. என்னே வாலிப உள்ளம்!

(1920)

மைசூர் அரசவையில் இசைவினிகை நிகழ்த்தச் செல்கிறவர்கள் மைசூர் வீணை சேஷண்ணு ஆதரவில் தங்கியிருப்பார்கள். பொழுதுபோக்குப்போல் அவர் இல்லத்தில், சிறிய திட்டத்தில், வந்தவர்களின் இசைவினிகை நடைபெறும். உண்மையில் இதெல்லாம் வெறும் பொழுதுபோக்குமட்டும் அன்று; வந்திருப்பவரின் தகுதியை முன்னதாக நோட்டம் பிடித்து மன்னருக்கு அறிவிக்கவும் உதவிற்று. அந்தப் பொறுப்புக்கு உரியவர்களாக விளங்கியவர்கள், வீணை சேஷண்ணு, வீணை சுப்பண்ணு, பிடாரம் கிருஷ்ணப்பா மூவரும் ஆவர்.

ஒரு தடவை பல்லவி மகாவித்துவான் நாமக்கல் நரசிம்ம ஐயங்கார் மைசூர் சென்ருர். சேஷண்ணு மிகுந்த மரியாதையோடு அவரை வரவேற்ருர். மற்றவர்களும் அங்கே கூடி இவ்வுபசாரத்தில் கலந்துகொண்டார்கள். ஆனால் யாருமே அவரைப் பாடும்படி கேட்கவில்லை. பொழுது போய்க்கொண் டிருந்தது.

"பாடட்டுமா? அரசவைக்குப் போகுமுன் இங்கே பாடுவது வழக்கமாமே?" என்று நரசிம்ம ஐயங்கார் வலுவிலே கேட்டார்.

"அந்தச் சம்பிரதாயமெல்லாம் மற்றவர்கள் விஷயத்திலேதான்" என்று ஏகோபித்து அவர்கள் கூறினார்கள்.

ஐயங்கார் சிரித்தார். "இருந்தாலும் பாடுகிறேன். சம்பிரதாயம் தடைப்படுவானேன்?" என்று தொடங்கி

விட்டார், பேகட வர்ணம், பேகட ராக ஆலாபனம், பேகட கீர்த்தனம்—இப்படி ஒரே பேகட மழையாகப் பொழிந்து தள்ளினர்.

மறுநாள் காலே; கலேஞர்கள் அரசவையை அடைந்தார்கள். ஆசனத்தில் அமர்ந்திருந்த மகாராஜா நரசிம்ம ஐயங்காரைக் கண்டதும் எழுந்துவிட்டார். இந்த மரியாதை முன்பு யாருக்கும் கிட்டியதே இல்லே. 'பல்லவி மேதை நரசிம்ம ஐயங்கார்' என்று கேள்விப்பட்டிருந்ததும், தொண்ணூறு ஆண்டுகளேக் கடந்திருந்த அவருடைய தோற்றத்தை நேரில் கண்டதும் மன்னர் உள்ளத்தில் அப்படி ஓர் அபூர்வமான மரியாதை உணர்ச்சியை எழுப்பினபோலும். அவரைக் கரங்கூப்பி வரவேற்று அமரும்படிக் கூறி உபசரித்தார். அவர் அமர்ந்த பிறகே தாம் அமர்ந்தார்.

"இவ்வளவு பெரியவர் எதுவுமே பாடவேண்டாம். இவரைச் சிரமப்படுத்தவே கூடாது. புஷ்பம்போல் இவரை மதிக்கவேண்டும். தோடா, சாதரா முதலிய மரியாதைகள் செய்து நல்லபடியாக இவரை அனுப்பி வைக்கவேண்டும்" என்று மகாராஜா திவானிடம் கூறிக் கொண்டிருக்கிறபோதே ஐயங்கார், "க்ருஷ்ண பூபதே!" என்ற பல்லவியைப் பிலஹரி ராகத்திலே கணீரென்று பாடத் தொடங்கிவிட்டார்.

'இவருடைய வாலிப உள்ளம் என்னே!' என்று மகாராஜா வியந்தார்.

*அறிவித்தவர்; மைசூர் திரு. டி. சௌடையா.*

# 11. அரத்தை அளித்தவர்

(1920)

செட்டி நாட்டில் தேவகோட்டை சங்கரபாகவதரின் கதா காலட்சேபத்திற்கு ஏற்பாடு ஆகியிருந்தது. முதல் நாள் வரை சீராக இருந்த பாகவதரின் சாரீரம் காலட்சேபத்தன்று - அசிரத்தையால் நேர்ந்த ஏதோ சில பத்தியப் பிழையினால் - பாறையாகக் கட்டிக்கொண்டது. அவருக்கு வைத்தியத் துறையில் தேர்ச்சி இருந்ததனால் கை வைத்தியமாக ஏதேதோ செய்துகொண்டார். முழு நன்மை கிட்டவில்லை. காலட்சேபத்தை நிறுத்திவிடவும் மனம் வரவில்லை. நேரம் சென்றுகொண்டிருந்தது.

வைபவம் நிகழும் இடத்திற்குப் புறப்படும் சமயம். வைபவ ஏற்பாடு செய்திருந்த பிரமுகர் வந்தார். "என்ன சேதி? புறப்படலாமா?'' என்று கேட்டுக்கொண்டே வந்தார். பாகவதர் புறப்பட்டுவிட்டார். "ஓர் உபகாரம் செய்யவேண்டும்" என்றார். பிரமுகர், "என்ன வேண்டும்?'' என்று கேட்டார். "சிறிது அரத்தை வேண்டும்'' என்று பாகவதர் கூறி வாய்மூடுமுன் பிரமுகர் கட்டளையிட்டார். ஏவலன் அரத்தை கொணர்ந்தான். பிரமுகர் முன்னே சென்றார். பாகவதர் பரிவாரம் சூழப் பின்னே சென்றார். அனைவரும் விழாமண்டபத்தை அடைந்தனர்.

கதை தொடக்கமாயிற்று. பிரார்த்தனைக் கீதங்கள்;— பின் பாட்டுக்காரர்கள் பாடினார்கள்; சங்கரபாகவதர் அபிநயம் செய்தார். இருமலும் கனைப்புமாகத் தவித்தார். குரல் பேசவே இல்லை.

சிறிது தூரத்தில் நின்று நிர்வாக மேற்பார்வை செய்துகொண்டிருந்த பிரமுகர் பாகவதர் நிலையைக் கண்டார்; கவலை கொண்டார். மெல்ல நடந்து பாகவ

தரின் அண்மையை அடைந்தார். "மிகவும் சிரமப் படுகிறீர்களே! சாரீரம் பேசவே இல்லையே! பாட முடியாமல் கஷ்டப்படுகிறீர்களே! வேறு ஏதாவது வேண்டுமா?" என்று அன்புடன் கேட்டார்.

பாகவதர் சிரித்தார். சிரமப்பட்டுப் பேசினார்:

"நீங்கள் மகா தர்மிஷ்டர் என்று பலகாலமாகக் கேள்விப்பட்டு வருகிறேன். கர்ணன் தன் வாழ்நாளிலே செய்த தர்மங்களின் பலனையே தானம் வழங்கினான். தர்மவானாகிய நீங்களும் எனக்கு அறத்தை வழங்கியிருக் கிறீர்கள். அறம் பாவத்தைப் போக்கும்; புண்ணியத் தைச் சேர்க்கும். அரத்தை தொண்டையிலே உள்ள பிசிர்களைப் போக்கும்; கலகலப்பைச் சேர்க்கும். கவலைப் படாதீர்கள். பாடல்களைப் பின்பாட்டுக்காரர்கள் நன்றாகப் பாடிவிடுவார்கள்; நான் அழகாகக் கதை சொல்லிவிடு கிறேன். அர(ற)த்தை அளித்த உங்கள் நல்ல மன சுக்கு எல்லாம் நலமாகவே முடியும்."

பாகவதர் பேச்சுப் பலர் செவிக்கு எட்டவே படபட வென்று கரகோஷம் தொடங்கிற்று. 'சீதா காந்த ஸ்மரணம்!' என்று அஞ்சலி செய்துவிட்டுப் பாகவதர் மிடுக்குடன் கதையைத் தொடர்ந்தார்.

அறிவித்தவர்: தேவகோட்டை திரு. சங்கர பாகவதர்

## 12. சகல வாத்திய விற்பன்னர்

(1920)

சென்னை சங்கீத சமாஜத்தில் சுப்பையரின் ஜலதரங்கக் கச்சேரி. மலைக்கொட்டை கோவிந்தசாமி பிள்ளை வயலின்; தாஸ் ஸ்வாமி மிருதங்கம்.

கலைஞர்கள் முன்னதாகவே அங்கே வந்துவிட்டார்கள். ஆனாலும் கச்சேரி தொடங்கவேண்டிய நேரத்தில் கண் கலக்கம் நேர்ந்துவிட்டது. காரணம், ஏதோ அலுவலாக வெளியே சென்ற தாஸ் ஸ்வாமி வரவில்லை. எல்லாரும் குழம்பினார்கள். என்றாலும் சமாஜத்தின் காரியதரிசி முனுஸ்வாமி நாயுடுவுக்கு மின்னலைப்போல் ஒரு யோசனை உதயம் ஆயிற்று. அவர் பல காலமாக, பெரிய பெரிய கலைஞர்களைக் கொண்டு வினிகைகளைச் சிறப்புற நடத்திப் பழுத்த அநுபவம் உடையவர். கோவிந்தசாமி பிள்ளையிடம் அளவுகடந்த அன்பும் நெருக்கமான நட்பும் உடையவர். ஆகவே பிள்ளையை அணுகித் தம் யோசனையை வெளியிட்டார். அதைக் கேட்டு அவர் முறுவல் புரிந்தார்.

அடுத்த நிமிஷத்தில் கலைஞர்கள் மேடையை அடைந்து அமர்ந்தார்கள். கச்சேரியை ரசிக்க வந்திருந்த மருங்காபுரி கோபால கிருஷ்ணையர் வயலினை ஏற்றுக் கொண்டார்; மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளை, தாஸ் ஸ்வாமியின் மிருதங்கத்துடன் அமர்ந்தார். ரசிகர்களிடையே மகிழ்ச்சிப் பேச்சொலி எழுந்தது.

கோவிந்தசாமி பிள்ளை வயலினில் மாத்திரமே வல்லவர் அல்லர்; அவருக்குப் புல்லாங்குழல் வாசிக்கத் தெரியும்; சுமாராக அன்று; சிறப்பாகப் பல கச்சேரிகளே செய்திருக்கிறார். தாள வாத்தியங்களில் நல்ல தேர்ச்சி

யும் உண்டு. தம் இல்லம் நாடிவரும் இளம் கலைஞர் களைப் பாடச்செய்து தாம் உற்சாகத்துடன் கஞ்சிரா, தபலா, டோலக் முதலியன வாசிப்பார். அந்த நாட்களில் பெரும்பாலான மேதைகளிடம் இத்தகைய சிறப்பு இருந் திருக்கிறது. இந்நாளைய கலைஞர்கள்—செம்பை, மகா ராஜபுரம், டி. ஆர். மகாலிங்கம் (மாலி) முதலிய சில ரிடமும் இந்தச் சிறப்பை நாம் கண்டு மகிழ்கிறோம்.

அன்றைய ஜலதரங்கக் கச்சேரியில் கோவிந்தசாமி பிள்ளை சுகபாவம் ததும்ப மிருதங்கம் வாசித்துச் சிறப் பித்ததை அறிந்த பெரியோர்கள் இன்றும் அதைப் பற்றிப் பேசி ஆனந்திக்கிறார்கள்.

## 13. பெருஞ்செலவில் பாராட்டு

**(1925)**

அரிகேச நல்லூர் முத்தையா பாகவதர் நாத சிந்தா மணி ராகத்தில் அமைந்த 'எவரனி' என்ற தியாகராஜ கீர்த்தனையை இசைத் தட்டில் பதிவு செய்தார். பின்னர் வினிகைகளை முன்னிட்டுப் பல ஊர்களுக்குச் சென்றார்.

ஒரு நாள் வீதியோடு செல்கையில் கிராமபோன் இசைத் தட்டின் ஒலியைக் கேட்டார். அவர் பதிப்பித் திருந்த 'எவரனி' என்ற பாடல்தான். ஆனால் குரல் வேறு ஒருவருடையதாக ஒலித்தது. விசாரணை செய்தார். அது நடிகர் எஸ். ஜி. கிட்டப்பா பாடிய இசைத் தட்டு. அப்போதுதான் வெளியாகி யிருந்தது. அவர் பதிப்பித்த கம்பெனி அன்று என்பதும் தெரிந்தது.

'ஆகா!...இது அல்லவா சாரீரம்! இப்படி அல்லவா பாடவேண்டும்!' என்று வியந்த வண்ணம் இருப் பிடத்தை அடைந்த பாகவதர், உடனே, தாம் இசைத் தட்டுப் பதிவு செய்திருந்த கிராமபோன் கம்பெனிக்குக் கடிதம் எழுதினார்—தாம் பாடிய இசைத் தட்டைப் பிரதி கள் எடுத்து வெளியிட வேண்டாம் என்று. "அந்தப் பாடலுக்காக நான் பெற்ற முன் பணத்தை இத்துடன் அனுப்பி யிருக்கிறேன். வேறு வகையில் என்னால் உங் களுக்கு எவ்வளவு செலவு என்பதை அறிவியுங்கள்; அந்த நஷ்டத்தையும் ஈடு செய்துவிடுகிறேன்" என்று அறிவித்து அந்த இசைத்தட்டை நிறுத்திவிட்டார். பாக வதரின் பெருந்தன்மையான போக்குகளில் இது ஒன்று.

## 14. "முன்னும் இல்லே! இனியும் இல்லே!"

(1925)

மாயூரத்தில் 'சுந்தரம் டாக்கீஸ்' என்ற பெயரில் இன்று சினிமா தியேட்டராக விளங்கிவருவது முன்பு 'அனந்தத் தாண்டவ ஹால்' என்ற பெயரோடு நாடக அரங்கமாக இருந்து வந்தது. அங்கே முன்பெல்லாம் நிரம்ப நாடகங்கள் நடைபெறும்.

1928-இல் அங்கே சங்கீத - நாடக மேதை எஸ். ஜி. கிட்டப்பாவின் வள்ளி திருமணம் நாடகம் நடைபெற்றது. கிட்டப்பா நாடகம் என்ருல் பல ஊர்களிலிருந்து ரசிகர்கள் வந்து கூடி நாடகத்தைக் கண்டு இன்புறுவார்கள். அன்றும் ஏராளமான கூட்டம்.

அப்போது கிட்டப்பாவும் கே. பி. சுந்தராம்பாளும் சில காலம் பிரிந்திருந்தார்கள். அதனுல் வேருெரு நடிகை வள்ளியாகத் தோன்றி நடித்தார்.

வள்ளி தினேப்புனம் காக்கும் கட்டம். நடிகை 'ஆலோலம்' பாடிவிட்டு உள்ளே சென்ருர்.

அவரும் சிறந்த நடிகைதாம். குரல் வசதியும், இசை ஞானமும் உடையவர்தாம். கூடியவரையில் நன்ருகவே பாடினுர்.

ஆனுலும் சுந்தராம்பாளின் ஆலோலத்தைப் பல முறை கேட்டுக் கேட்டுப் பழகிப்போயிருந்த கிட்டப்பாவின் காதுக்கு அந்த நடிகையின் ஆலோலம் ரசிக்கவில்லே.

நடிகை உள்ளே சென்றவுடன் கிட்டப்பா வெளியே வந்தார். அதே பாடலேத் தாம் பாடினுர்; பிரமாதமாகப் பாடினுர்.

பாடி முடித்துவிட்டு விதூஷகனை அங்கே நின்றிருந்த ஜாலி கிட்டு ஐயரிடம், "சற்றுமுன் இப்படிக் குரல் எடுத்து இங்கே ஆலோலம் பாடியவர் யார்?" என்று நாடக முறையில் கேட்டார்.

கிட்டு ஐயர், "இப்படியா? இம்மாதிரி குரல் இதற்கு முன்னும் இல்லை; இனியும் இல்லை!" என்று உணர்ச்சியுடன் கூறினார்.

அவர் ஒரு தீர்க்கதரிசி அல்லவா?

*அறிவித்தவர்: மாயூரம் திரு. எஸ். எஸ். மணி ஐயர்.*

# 15. ஆனைக்கும்......

## (1928)

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த மெரட்டூரில் தனவந்தர் ராஜப்பையர் இல்லத்தில் திருமண வைபவம். திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை நாகசுரம்.

மதுரை புஷ்பவனம், திருவாவடுதுறை ராஜரத்தினம், எஸ். ஜி. கிட்டப்பா, ஜி. என். பாலசுப்பிரமணியம், டி. ஆர். மகாலிங்கம் என்றால் ரசிகர்களிடையே அளவற்ற மோகம். 'கொடி கட்டிப் பறப்பது' என்பது இந்தக் கலைஞர்கள் விஷயத்தில் முழு உண்மை.

'தோடி, பைரவி முதலிய ராகங்களை இசைக்கவென்றே பிறந்தவர் ராஜரத்தினம் பிள்ளை' என்பார்கள். ராஜப்பையர் வீட்டுக் கல்யாணத்திலே அவர் பைரவி வாசிக்கத் தொடங்கினார். ஆனால்...

என்ன சோதனை! அந்த ராக தேவதைக்கு அப்போது அவரிடம் என்ன கோபமோ; வாசிப்புச் சரியாக அமையவில்லை. அவரும் எவ்வளவோ முயன்றார்; பயன் இல்லை.

இசைமேதை மெரட்டூர் முத்துகிருஷ்ணையர் சட்டென்று முன்னணிக்கு வந்தார். "நிறுத்து ராஜரத்தினம்!" என்றார். தவில் வித்துவானை நோக்கி, "விஸ்தாரமாக ஓர் ஆவர்த்தனம் நடக்கட்டும்" என்றார்.

ஆவர்த்தனம் முடிந்த சூட்டோடு ராஜரத்தினம் வாசிக்கத் தொடங்கினார். பைரவி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. ராஜரத்தினம் முத்துகிருஷ்ணையரை நோக்கி வணக்கம் செலுத்தினார்.

அறிவித்தவர் : மெரட்டூர் திரு. பாலு பாகவதர்.

## 16. முதல் அநுபவம்

(1928)

மயிலை கபாலி ஆலயத்தில் உற்சவம். ஆண்டு தோறும் அங்கே உற்சவத்தின்போது சிறப்பாகப் பல இசைக் கச்சேரிகள் நடைபெறும். 1928-இல் பெரிய வித்துவான் ஒருவரின் கச்சேரிக்கு ஏற்பாடு ஆகியிருந் தது. அவருக்குச் சௌகரியம் இல்லை. நிர்வாகிகள் திருவல்லிக்கேணியை அடைந்து ஜி. வி. நாராயணசாமி ஐயரைப் பார்த்தார்கள்.

அவருடைய புதல்வர் அந்த ஆண்டில் பி. ஏ. ஆனர்ஸ் தேறியிருந்தார். இசையிலும் பயிற்சி பெற் றிருந்தார். ஆனால் கச்சேரி எதுவும் செய்ததில்லை. ஆலய நிர்வாகிகள் வற்புறுத்தினார்கள்.

'...அரங்கேற்றம்கூட நடைபெறவில்லையே! பெரிய அவையின் முன், பெரிய வித்துவானுக்குப் பதிலாக...'

இப்படி எண்ணித் தயங்கிய இளைஞருக்கு ஒருவர் தைரியம் சொன்னார். 1918-இல் திருப்பரங்குன்றத்தில் மதுரை புஷ்பவனத்திற்குப் பதிலாக அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார் பாடியதை அவர் குறிப்பிட்டார். 'கபாலி ஆலயத்தில் அரங்கேற்றம் கடவுளின் கருணையினால் நிகழ்வது' என்றார். வேறுவழியின்றி இளைஞர் இசைந்தார்.

மேடையை அடைந்ததும் இளைஞரின் இருதயம் கடிகாரத்தின் நிலை பெற்றது. குருமார்களை மானசிகமாக வணங்கிப் பாட ஆரம்பித்தார். அவருடைய குரு மதுரை சுப்பிரமணிய ஐயர் வயலின்; நண்பர் புதுக்கோட்டை வக்கீல் கே. ராஜாமணி மிருதங்கம். மூன்று மணிநேரம் ஜமாய்த்துவிட்டார் இளைஞர் ஜி. என். பாலசுப்பிர மணியம்.

*அறிவித்தவர்: திரு. ஜி. என். பாலசுப்பிரமணியம்.*

## 17. எத்தனை கட்டை?

(1928)

மாயூரத்தில் மகாராஜபுரம் விசுவநாதையர் கச்சேரி. கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வயலின்; மாயூரம் ராமகிருஷ்ணையர் மிருதங்கம்.

'பெரிய வித்துவான் ஆயிற்றே, நன்றாக வாசித்து நல்ல பெயர் வாங்க வேண்டுமே!' என்று கச்சேரி ஒப்புக்கொண்ட நாளாக ராமகிருஷ்ணனுக்குக் கவலை.

வித்துவான்கள் சிற்றுண்டி காபி அருந்தி, தாம்பூலம் தரித்து உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். ராமகிருஷ்ணன் உள்ளூர்க்காரர், வயதில் இளையவர் என்ற முறையில் அவர்களுக்கு ஆகவேண்டியவைகளைக் கவனித்தார்; உள்ளுக்குள் கவலை.

'ஒன்று சரிவராவிட்டால் மற்றொன்று இருக்கட்டும்' என்று இரண்டு வாத்தியங்களை எடுத்துச் செல்வது மிருதங்க வித்துவான்களின் வழக்கம். முதல் முதலாக விசுவநாதையருக்கு வாசிக்கப் போகும் ராமகிருஷ்ணனுக்கு அவருடைய சுருதி தெரியாது. தெரிந்தால் பொருத்தமான வாத்தியங்களை மேடைக்குக் கொண்டு போகலாமே என எண்ணினார். பவ்வியமாக விசுவநாதையரை அணுகினார். மெதுவாகக் கேட்டார்.

"அண்ணாவுக்கு எத்தனை கட்டை?"

விசுவநாதையர் சட்டென்று தம் உடம்பை ஒரு முறை நோக்கிக்கொண்டார். பிறகு, "அதை இப்போது எப்படிச் சொல்வது?" என்றார்.

எல்லாரும் கொல்லென்று சிரித்துவிட்டார்கள்.

*அறிவித்தவர்: மாயூரம் திரு. எஸ். எஸ். மணி ஐயர்.*

## 18. "மறந்து போச்சே!"
### (1930)

சென்னை கோகலே மண்டபத்தில் செம்மங்குடி ஸ்ரீநிவாஸையர் கச்சேரி. அப்போது அவருடைய புகழ் உச்சநிலையை எட்டிக் கொண்டிருந்தது.

ஆசிரியர் கல்கி மனம் வைத்து ஒரு செயலில் ஈடு பட்டால் அதை வெற்றிகரமாக நிறைவேற்றிவிட்டுத் தான் மறுகாரியம் பார்ப்பார். தமிழிசை இயக்கம், பாரதி மண்டபம், திரு. வி. க. மண்டபம்—இப்படி எத்தனையோ செயல்கள். இந்த வரிசையில் பாரதி பாடல்களைப் பரவச் செய்யும் முயற்சியும் ஒன்று. இந்தப் பணியில் செம்மங் குடி அவரோடு ஒத்துழைத்தார். கச்சேரிகளில் பாவம் ததும்பப் பாரதி பாடல்களைப் பாடிவந்தார். கிளர்ச்சி யுள்ளம் படைத்த கல்லூரி மாணவ மாணவிகளுக்கு இதனால் அவரிடம் ஒரு பக்தி.

அன்று அவையிலும் மேல்தளங்களிலும் மாணவர் கூட்டம் மிகுதி. கச்சேரியின் பாதிநிலைக்குமேல் மூலைக்கு மூலை பல குரல்கள் எழும்பின. அவரவர்களுக்கு விருப்ப மான பாடல்களைப் பாடும்படி கேட்டனர். அவற்றுள் 'ஆசைமுகம் மறந்து போச்சே' என்ற பாரதியின் கண்ணன் பாடலும் ஒன்று. மேல் தளத்திலிருந்து "ஆசைமுகம்!" என்ற குரல் வலுவாக ஒலித்தது. செம்மங்குடி அங்கே குறிப்பாக நோக்கியபடி, "மறந்து போச்சே!" என்றார். உடனே கட்டிடம் அதிரும் கர கோஷம். அதைத் தொடர்ந்தே ஸ்ரீநிவாஸையர் அந்தப் பாடலை, அழகு ததும்பப் பாடத் தொடங்கினார். அவை யில் அமைதி நிலவலாயிற்று.

நூலாசிரியர் நேரில் அறிந்தது.

## 19. வார்

### (1930)

சென்னையில் ஓரிடத்தில் மகாராஜபுரம் விசுவநாதையர் கச்சேரி. மதராஸ் பாலகிருஷ்ணையர் வயலின்; ராமநாதபுரம் ஈசுவரன் மிருதங்கம்.

அன்று என்ன காரணத்தாலோ ஈசுவரனுடைய வாத்தியத்தில் அடிக்கடி கோளாறு நேர்ந்த வண்ணம் இருந்தது. விசுவநாதையர் பொறுமையை இழந்தார்.

"மிருதங்கத்திற்கு அடிக்கடி 'வார்' பிடிக்கவேண்டும். சென்ற 'வாரி'ன்போது 'வார்' பிடித்ததோ? அதுதான் இத்தனை கோளாறு! இனி அடுத்த 'வார்' வந்தால்தான் இந்த மத்தளத்திற்கு விமோசனம்போல் இருக்கிறது!"

முன்னணியில் இருந்தவர்கள் கொல்லென்று சிரித்து விட்டார்கள். ஈசுவரன் நாணத்துடன் தலை கவிழ்ந்தபடி வாத்தியத்தைச் சரிசெய்து கொண்டு வாசிக்கத் தயாரானார்.



இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்தபோது ஈசுவரன் விசுவநாதையரைக் காணச் சென்றார். "அண்ணா! அடுத்த 'வார்' வந்துவிட்டது. நீங்கள் சொன்னபடியே என் மத்தளத்திற்குப் புது 'வார்'பிடித்து ஜோராக வைத்திருக்கிறேன். கச்சேரி 'சான்ஸ்' வந்தால் சொல்லுங்கள்" என்றார்.

இப்போது விசுவநாதையர், "பலே, பலே!" என்று கூறி இடி இடி என்று சிரித்தார்.

அறிவித்தவர்: மதராஸ் திரு: பாலகிருஷ்ணையர்.

## 20. "கட்டின பெண்சாதியும் பழகின செருப்பும்......"

*(1930)*

காஞ்சீபுரத்தில் அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் கச்சேரி. செம்மங்குடி நாராயணசாமி ஐயர் வயலின்; புதுக்கோட்டை தட்சிணுமூர்த்தி பிள்ளை மிருதங்கம். அன்று தட்சிணுமூர்த்தி பிள்ளை சிறிது உற்சாகத்துடன் இருந்தார். காரணம், மிகுந்த பிரியத்தோடு தயாரித்த புதிய வாத்தியத்தில் வாசிக்கப்போகிறோம் என்கிற நினைவுதான்.

கச்சேரி தொடங்குமுன் பக்கவாத்திய வித்துவான்கள் சுருதி நிர்ணயத்தில் ஈடுபட்டார்கள். நாராயணசாமி ஐயரின் அலுவல் எளிதில் முடிந்துவிட்டது. தட்சிணுமூர்த்தி பிள்ளை விஷயம் போராட்டமாகிவிட்டது. வாத்தியத்தின் கண்கள் லேசில் சமநிலை பெறவில்லை. தட்டிக்கொட்டி என்ன என்னவோ செய்து பார்த்தார்; பயன் இல்லை. அவருக்குக் கோபம் வந்து விட்டது; "முருகா!" என்று கூவினுர். கத்தியை எடுத்து மத்தளத்தில் குத்தித் தோலைக் கிழித்தார். மாணவனை அழைத்தார். "பழைய வாத்தியத்தைக் கொண்டுவாடா! கட்டின பெண்சாதியும் பழகின செருப்புந்தான் சமயத்தில் கைவிடாமல் உதவுவார்கள்; புதுமையும் பகட்டும் வேஷத்தோடு சரி!" என்ருர்.

மாணவன் பழைய வாத்தியத்தைக் கொண்டு வந்தான். ஆர்வம் பொங்க அதை வாங்கிச் சார்ப்புக் கொடுத்தார். அந்த நாதம் அவர் செவிவழி புகுந்து உள்ளத்திற்குக் குளிர்ச்சியைத் தந்தது; முகத்தில் மலர்ச்சி வந்தது.

*அறிவித்தவர்: மயிலை திரு. வி. சுந்தரமையர்.*

# 21. அருள் மனம்

(1932)

"திருச்செந்தூரில் கச்சேரி செய்ய ஒப்புக்கொண் டிருக்கிறேன். வயலின் இங்கே ஏற்பாடு செய்துகொண்டு வருகிறேன். மிருதங்கத்திற்கு யாரையாவது ஏற்பாடு செய்து உதவவேண்டும்" என்று செம்பை வைத்தியநாத பாகவதர் தம்முடைய நண்பராகிய அருப்புக்கோட்டை கணேச பிள்ளை என்ற நாகசுர வித்துவானிடம் கடித மூலம் கேட்டுக்கொண்டார். அவர் இளைஞர் ஒருவரைத் திட்டம் செய்தார்.

பாகவதர் குறித்த நாளில் திருச்செந்தூரை அடைந் தார்; செய்தியை அறிந்தார். "ஓ! அந்தப் பையனா? முன்பே ஒரு முறை எனக்கு வாசித்திருக்கிறானே! மிக வும் சந்தோஷம்" என்றார்.

கச்சேரிக் குழுவினர் உரிய நேரத்தில் மேடையை அடைந்தனர். செம்பை பாகவதர் பாட்டு என்றால் அப் போது ரசிகர்களுக்கு எல்லையற்ற குதூகலம். அன்றும் அத்தகைய குதூகல உணர்ச்சியோடுதான் அவையில் ஏராளமான ரசிகர்கள் கூடினார்கள். ஆனால்......

மிருதங்கம் வாசிக்க வந்திருந்த இளைஞரைப் பார்த் ததும் அவர்களின் மகிழ்ச்சி குறையலாயிற்று. "பெரிய வித்துவானாகிய இவர் பாட்டுக்கு இந்தச் சிறு பிள்ளை யால் ஈடு கொடுத்து வாசிக்க முடியுமா?" என்று பேசிக் கொண்டார்கள். "இன்று கச்சேரி சுமாராகத்தான் இருக்கும்" என்று முணுமுணுத்தார்கள். இந்தப் பேச்சு, பாகவதர் செவிக்கும் எட்டிற்று.

கச்சேரி ஆரம்பம் ஆயிற்று. வர்ணம்; ஒரு மத்திம கால உருப்படி; அடுத்து மிருதங்கத்திற்குத் தனி.

இளைஞர் மிக உற்சாகத்துடனும் பொறுப்புடனும் வாசித்தார். பாகவதர் அங்கங்கே, 'ஆகா!', 'பேஷ்!', 'பலே பேஷ்!', 'பலே ராஜா!', 'அப்படி!'—என்றெல்லாம் வாய்விட்டுக் கூறி, அமர்க்களமாகக் கர தாளமிட்டு அமளி செய்தார்.

ஆவர்த்தனம் முடிந்தது. பாகவதர் பாடினார். இரண்டு கீர்த்தனைகள்; மீண்டும் மிருதங்கத்திற்குத் தனி!

இம் முறையில் முன்னிலும் அதிகமான பாராட்டு மொழிகளை அவர் பொழிந்தார். "ஆகா!.. மூர்த்திதான் சிறிது. இத்தனை அபார விஷயங்களை உன்னுள் அடக்கி வைத்திருக்கிறாயா! நல்லதப்பா!" என்றார். குறிப்பான இடங்களில் படபடவென்று கரகோஷம் செய்தார். அவையினரும் அவரைப் பின்பற்றினர்.

அன்று முதல் அந்த இளைஞருக்கு யோகம்.

"இசை உலகில் நாலுபேர் என் பேரைச் சொல்லும் நிலையை ஏற்படுத்திய புண்ணியவான் அல்லவா?" என்று செம்பை பாகவதரைப் பற்றிப் பேசுகையில் அஞ்சலி செய்கிறார் ராமநாதபுரம் முருகபூபதி அவர்கள்.

அறிவித்தவர்: காரைக்குடி திரு. ராமசுவாமி ஐயர்.

# 22. வெறும் பாட்டு உண்மைப் பாட்டானது எப்படி?

(1932)

இன்று திரைப்பட உலகில் பின்னணிப் பாடகர்களில் குறிப்பிடத்தக்க ஒருவராகப் புகழ் பெற்றுவரும் வி. என். சுந்தரம் சிறு பிராயத்தில் படங்களில் நடித்துப் புகழ் பெற்றவர். பக்த மார்க்கண்டேயர், பட்டினத்தார் இரண்டும் அவருக்குப் புகழை அளித்த படங்கள்.

மார்க்கண்டேயர் படத்தைப் பட உலகில் புகழ் பெற்ற முருகதாஸா டைரெக்ட் செய்தார். அவர் சிறந்த கலைவல்லுநர்; முழுத் திருப்தி ஏற்படாத வரையில் எதையும் ஏற்றுக்கொள்ளமாட்டார்.

மார்க்கண்டன் திருக்கடையூர் என்னும் தலத்தை அடைந்து அமுத கடேசுவரரைப் பூஜித்துக் கொண்டிருக்கிறான். அவன் ஆயுட்காலம் முடிவுறுவதைக் கணக்கிட்டுக்கொண்டு அவனுடைய உயிரைக்கொண்டு செல்லக் காலனே நேரில் வருகிறான். இளைஞன் மார்க்கண்டன் காலனைக் கண்டு அஞ்சி, மருண்டு அழுகிறான். அழுகை பாட்டாகிறது. பாடிக்கொண்டே அவன் சிவலிங்கத்தைத் தழுவிக் கொள்கிறான்.

இந்தக் கட்டத்தின் படப்பிடிப்பு நிகழ்ந்தது. 'ஆதாரம் யாரும் இல்லை ஐயா' என்ற பாட்டு. சுந்தரம் சிறப்பாகப் பாடினார். ஆனால் வெறும் பாட்டாக இருந்தது. டைரெக்டருக்குத் திருப்தி ஏற்படவில்லை. மிகவும் பொறுமையோடு பலமுறை ஒத்திகை நடத்தினார்; பய உணர்ச்சியும், அழுகையும், பாடலும் ஒருமித்து அமையவே இல்லை. காலம் வீணாகிக் கொண்டே இருந்தது.

டைரெக்டர் பொறுமையை இழந்தார். சுந்தரத்தை நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். தம் பலம் கொண்ட மட்டும் 'பளார், பளார்' என்று நாலு அறை வைத்தார். அவர் கண்களில் தீப்பொறி பறந்தது. "உம்!...பாடு!" என்று கர்ஜித்தார்.

சுந்தரம் ஓவென்று அழுதார். வலி ஒருபுறம், கிலி ஒருபுறம். டைரெக்டர் பின் வாங்கினார். சுந்தரம் கலங்கிய உள்ளத்துடன் நீர்நிறைந்த கண்களால் அவரைப் பார்த்தபடி அழுதுகொண்டே பாடினார். டைரெக்டர் முகமலர்ச்சியுடன் துணைத் தொழிலாளர்களுக்கு அறிக்கையிட்டார். இயந்திரங்கள் இயங்கின. படப்பிடிப்பு முடிந்தது. "ஏ ஒன்!" என்று டைரெக்டர் குதூகலித்தார். ஆனால்......

தம் விடுதியை அடைந்த சுந்தரம் குப்புறப் படுத்துக் குலுங்கக் குலுங்க அழுதார். அவருக்கு உணவு கொண்டு வந்தார்கள். அவர் உட்கொள்ள மறுத்தார். "இனிப் படப்பிடிப்பும் வேண்டாம்; பாக்கிப் பணமும் வேண்டாம். நான் ஊருக்குப் போகிறேன்!" என்று விசித்தார்.

இனிய தின்பண்டங்களுடன் டைரெக்டர் அவரிடம் வந்தார். சமாதான மொழிகள் புகன்றார். "நிஜமாக நான் உன்னை அடிக்கவில்லை. நீ நிஜமாக நடிப்பதற்காகப் பொய்யாக அடித்தேன். இந்தப் படம் உனக்கு எத்தகைய புகழைத் தேடித் தரப்போகிறது பாரேன்!' என்று இளைஞரை அணைத்துக் கொண்டார்.

"அடித்த கையே அணைத்தது. அந்த மன்னன் சொன்னது முற்றும் உண்மையே. அந்தப்படம் எனக்கு அபாரமான புகழை அளிக்கத்தான் செய்தது, அவர் அடித்து என்னை நடிக்கச் செய்ததால்" என்கிறார் வி. என். சுந்தரம்.

அறிவித்தவர்: திரு. டி. ஆர். குருஸ்வாமி (மஹி)

# 23. நோட்டில் பாட்டு!

(1935)

மகாராஜபுரம் விசுவநாதையரிடம் 1933-இல் குரு குலவாசம் தொடங்கிய மன்னார்குடி சாம்பசிவன் கும்ப கோணத்தில் இருந்து வரலானார். அவர் அதற்கு முன்பே கச்சேரி செய்யும் தகுதியை ஓரளவு பெற்றிருந் தாலும், சில இடங்களில் மேடையிலமர்ந்து பாடி வந்தாலும், லட்சியசித்தியை எண்ணி, குருகுலவாசம் தொடங்கியதும் கச்சேரி செய்வதை நிறுத்தினார்; தீவிரப் பயிற்சியில் ஈடுபட்டார்.

கும்பகோணம் சகோஜி நாய்க்கன் தெருவில் குப்பு சாமி ஐயர் என்ற பிரமுகர் வசித்து வந்தார். அவர் சிறந்த வழக்கறிஞர். சாம்பசிவன் அவருடைய அன் பைப் பெற்றார். அவர் இல்லத்தைச் சாதகம் செய்வதற்கு உரிய இடமாக ஆக்கிக்கொண்டார். தினசரி இரவில் அங்கே அமர்ந்து சாதகம் செய்வார்.

இன்று நம்மிடையே வாழ்ந்துவரும் மாஜி நீதிபதி திவான் பகதூர் கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரிகள் அப்போது அதே தெருவில் வசித்துவந்தார். தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், வடமொழி முதலியவற்றிலே பாண்டித்தியமும் பற்றுதலும் உடைய அவர் கர்நாடக இசையிடத்தும் மிகுந்த அபிமானம் உடையவர். சாம்ப சிவன் சாதகம் செய்யத் தொடங்கினதும் சாஸ்திரிகள் அங்கே வந்து அமர்ந்து ரசிக்கத் தொடங்குவார். சாஸ்திரிகளின் தகப்பனாருக்கும் சாம்பசிவனிடம் அன்பு அதிகம்; அவருடைய வாக்குச் சுத்தத்திலே பிடிப்பு அதிகம். அடிக்கடி சாம்பசிவனைக் கூப்பிட்டு அனுப்பிப் பாடச் சொல்லிக் கேட்டுத் திருப்தி அடைவார்; மகிழ்ச்சி பெறுவார்.

சிறு பிராயத்திலேயே சுயமாகப் பாடல்களை இயற்றும் ஆற்றல் சிலரிடம் அமைவதுண்டு. சாம்ப சிவனிடமும் அந்த ஆற்றல் அமைந்திருந்தது. அவர் முதல் முதலாக இயற்றிய சாகித்தியம் ராமப்ரியா ராகம், ஆதி தாளத்தில் அமைந்த 'ஸரியெவருன்னுருரா ?' என்ற கீர்த்தனை. காயகசிகாமணி அரிகேச நல்லூர் முத்தையா பாகவதர், சங்கீத சாகித்திய வித்துவான் பாபநாசம் சிவன், சங்கீத கலாநிதி முசிரி சுப்பிரமணிய ஐயர் முதலிய இசை அறிஞர்கள் இந்தச் சாகித்தியத் தைக் கேட்டு மிகவும் பாராட்டினுர்கள்.

பாடல் கவனம் செய்பவர்களுக்குத் திடீர் திடீர் என்றுதான் கவன சக்தி ஏற்படும். அதற்கு இடம் பொருள் ஏவல் வரையறை இல்லை.

சாம்பசிவன் திருப்பதித் திருமலைக்குப் போயிருந் தார். ஏழுமலை ஆண்டவனைத் தரிசனம் செய்ததும் அவர் உள்ளத்திலே பக்தி உணர்வு பொங்கிற்று. உடனே அது பாடலாக உருப்பெற்றது. எழுதிக் கொள்ளக் காகிதம் இல்லை. பையில் ரூபாய் நோட்டுகள் இருந்தன. பரபரவென்று அவற்றில் பாட்டை எழுத லானுர். 'வேங்கடேசுவரா, வேகப்ரோவரா' என்பதுதான் அந்தப் பாடல். ராகம் காம்போஜி; தாளம் சாபு.

அருகில் இருந்த அன்பர், "அடடா! ரூபாய் நோட்டை வீணுக்கி விட்டீர்களே!" என்று அங்கலாய்த் தார்.

சாம்பசிவன் சிரித்தார். "நூறு ரூபாய் நோட்டாக இருந்திருந்தாலும் எழுதியிருப்பேன். இந்தப் பாட்டை விட அந்த நோட்டு உயர்த்தியா!" என்ருர்.

அன்பர் வியப்புடன் மௌனமாகத் தலை அசைத் தார்.

அறிவித்தவர்: மன்னுர்குடி திரு. சாம்பசிவையர்.

## 24. நாணும் அரைஞாணும்

(1935)

மதுரையில் அரிகேச நல்லூர் முத்தையா பாகவத ரின் சீதாகல்யாண கதாகாலட்சேபம். கூட்டம் ஏராளம். அவருடைய கதைகளுக்குப் பழுத்த அறிவாளிகள் முதல் பள்ளி மாணவர்கள் வரை, நரை திரை எய்திய பெண் மணிகள் முதல் சின்னஞ் சிறுமியர் வரை அனைவரும் வருவார்கள். அனைவருக்கும் தேவையான பல்சுவை களும் அவர் கதைகளில் நிறைந்திருக்கும்.

"...ஜனகன் சபையில் ஏராளமான கூட்டம். அவன் வைத்திருந்த சிவதநுஸினிடம் செல்லமட்டும் யாரும் துணியவில்லை. சிலர் முயன்று அவமானமடைந்தனர். பிறகு அவையில் அமைதி. ஜனகனின் முகம் வாடி விட்டது. 'இங்கே இதைக் கையாள யாருமே இல் லையா?' என்று, ஏக்கக் குரலில் கேட்டான். 'கவலைப் படாதே ஜனகா!' என்று இடிமுழக்கம்போல் விசுவா மித்திரர் குரல் கேட்டது. அவர் பார்வை அருகே இருந்த ராமசந்திரன்மீது விழுந்தது. இளஞ்சிங்கம் எழுந்தான். காளைபோல் நடந்தான். மேடையை அடைந்தான். இடக்கரத்தால் அலட்சியமாக அந்தத் தநுஸை எடுத் தான். வலக்கையால் அதன் நாணைத் தடவினான். மழ மழவென்று இருந்தது......ஜனகசபையில் பெண்கள் பகுதியில் பேச்சொலி மெதுவாகக் கேட்டது...' ஆகா! அந்தக் கயிறு எவ்வளவு மழமழப்பாய் இருக்கிறது! எங்களவர் அரைஞாண் எண்ணெய்ப் பிசுக்கேறி இப் படித்தான் இருக்கும்!...' என்றாள் ஓர் அம்மாள்..."

அவையில் பெண்கள் பகுதியில் ஏற்பட்ட சிரிப் பொலி அடங்க வெகு நேரம் ஆயிற்று.

*அறிவித்தவர்: சென்னை திரு. ஆர். நீலகண்டன்.*

## 25. குருவை நினைந்துருகு!

(1936)

ஐந்து ஆண்டுகள் தொடர்ந்து விசுவநாதையரிடம் குருகுலவாசம் செய்த மன்னார்குடி சாம்பசிவன் அந்தக் காலத்தில் குருவினிடம் நடந்துகொண்ட முறை, பணி புரிந்தநிலை முதலியவை சரித்திரத்தில் இடம்பெறத் தக்கன. அன்றும் இன்றும் விசுவநாதையர் சாம்பசிவனின் மாணவத் தன்மைபற்றி வாய்நிறையக் கூறுகிறார். 'இப்படியாகக் குருவின் அன்பையும் அருளையும் பெற்றதனால்தான் இன்று நான் சுகமாக வாழ்கிறேன்' என்கிறார் சாம்பசிவன். இதற்கு, மாணவரின் மாசற்ற குரு பக்திதான் காரணம். பின் வரும் இரு நிகழ்ச்சிகள் அதை மெய்ப்பிக்கின்றன.

★

திருவையாறு தியாகோற்சவத்தில் சாம்பசிவன் பாடிக்கொண்டிருந்தார். திருவாலங்காடு சுந்தரேசையர் வயலின்; தஞ்சாவூர் வைத்தியநாதையர் மிருதங்கம். சபையில் வேணுகான விற்பன்னர் பல்லடம் சஞ்சீவி ராவ் முதலியோர் நிறைந்திருந்தனர்.

சாம்பசிவனுக்குச் சிறு வயது முதலே தியாகப் பிரம்மத்தினிடம் நிறைந்த பக்தி உண்டு. ஆகவே அவர் தியாகையர் மேல் பூரி கல்யாணி ராகம் ஆதி தாளத்தில், 'குருவை நினைந்துருகு மடமனமே' என்கிற பாடலை இயற்றியிருந்தார். அங்கே அதை அவர் பாடத் தொடங்குகையில் விசுவநாதையர் அவைக்கு விஜயம் செய்து முன்னணியில் வந்து அமர்ந்தார். சாம்பசிவன் மெய் சிலிர்க்கச் சிரந்தாழ்த்தி அவரை வணங்கினார். பிறகு தொடர்ந்து பாடினார். இந்தப் பொருத்தத்தை எண்ணிச்

சிலர், "சரியான சமயம்! பேஷ், பேஷ்!" என்றார்கள். விசுவநாதையர் முறுவலித்துத் தலை அசைத்தார்.

சாம்பசிவன் இசைக்கச்சேரி செய்வதுடன் கதா காலட்சேபமும் செய்யத் தொடங்கிவிட்டார். கதையம்சம், அந்த அந்தக் கதைக்குரிய பாடல்கள், வழிமுறை அனைத்தையும் தனித்த முறையில் தாமே அமைத்துக் கொண்டார். புரந்தர தாசர் சரித்திரம், திருநீலகண்டர் சரித்திரம், தியாகப் பிரம்ம சரித்திரம்—இப்படியாகப் பல மகான்களின் திவ்ய சரிதங்களை எளிய முறையிலே, சார சங்கிரகமாக அமைத்து, கேட்பதற்குச் சற்றேனும் அலுப்பு ஏற்படாத முறையில், வீண் வளர்த்தல், அநாவசியமான இடைச் செருகல் ஏதும் இன்றி மிகச் சிறப்பாகச் செய்து வரலானார்.

சென்னை தியாகராய நகர் கிருஷ்ண கான சபையில் சாம்பசிவன் தியாகப் பிரம்ம சரித்திரக் காலட்சேபம் செய்துகொண்டிருந்தார். தியாகையருக்குக் குரு உபதேசம் செய்யும் கட்டம். அதற்குரிய பாடலை அவர் உள்ளம் உருகப் பாடத் தொடங்கினார். அப்போது மகாராஜபுரம் விசுவநாதையர் அவைக்கு விஜயம் செய்தார். சாம்பசிவன் அவருக்கு அஞ்சலி செய்தார்.

மேற்குறித்த இரு நிகழ்ச்சிகளையும் குறிப்பிட்டு அன்பர்கள் அடிக்கடி பேசிக்கொள்கிறார்கள்.

அறிவித்தவர்: மன்னார்குடி திரு. சாம்பசிவையர்.

## 26. 'கானமுத பானம்'

### (1937)

வயலின் வாத்திய மேதை துவாரம் வேங்கடசாமி நாயுடு மன்னார்குடி சாம்பசிவன் இயற்றிய தெலுங்கு சாகித்தியங்களைக் கேட்டு மகிழ்ச்சி பெற்றார். அடாணா ராகம், கண்டசாபு தாளத்தில் அமைந்த 'நாதுபை தய லேதா' என்ற கீர்த்தனை அவருக்கு மிகமிகப் பிடித்தமான ஒன்று. "இசைப் புலமை, மொழிப் பயிற்சி இவற்றோடு தெய்வபக்தியும் கூடினால் உயிரோட்டம் நிறைந்த சாகித் தியங்கள் தாமாக வரும்; இவை அத்தகையவை" என்றார். அவர் வாக்கு வீண் இல்லை.

சென்னை மயிலாப்பூர் பி. எஸ். நடுநிலைப் பள்ளி யில் டைகர் வரதாசாரியார் தலைமையில் மகான் கோடீசு வர ஐயர் நாளைக் கொண்டாடினார்கள். வித்துவான்கள் தனித்தனியே கோடீசுவர ஐயர் சாகித்தியங்களைப் பாடினார்கள்.

சாம்பசிவன் பாடவேண்டிய கட்டம் வந்தது. அவருக்கோ அப்போது கோடீசுவர ஐயர் சாகித்தியங் களில் ஒன்றுகூடத் தெரியாது. வற்புறுத்தலுக்கு எதிரே பின் வாங்கவும் மனம் இல்லை. துணிந்து மேடையில் ஏறி அமர்ந்துவிட்டார். வேறு சாகித்தியங்களை அங்கே பாடுவது பொருள் அற்ற செயல். சற்றே யோசனை செய்தார். வழி புலன் ஆயிற்று.

கோடீசுவர ஐயர் சாகித்தியங்களைத் திரட்டி, 'கான முத பானம்' என்ற தலைப்பில் நூல் உருவில் வெளி யிடப்பெற்றிருப்பது நினைவு வந்தது. உடனே மலைய மாருத ராகம், ரூபக தாளத்தில், 'கானமுத பானம் செய்; தானாய் வரும் ஞானம்' என்ற பாடலை இயற்றிப் பாடி நிலைமையைச் சமாளித்தார்.

*அறிவித்தவர்: மன்னார்குடி திரு. சாம்பசிவையர்.*

# 27. இசை மடு

**(1938)**

சென்னை எழும்பூர் ஜகந்நாத பக்த சபையில் மைசூர் செளடையாவின் வயலின் 'சோலோ' கச்சேரி. பல முறை ஏற்பாடு செய்து நடைபெருமல் நின்றுபோன அக் கச்சேரி அன்று நிகழ்ந்தபோது செளடையாவுக்கு வெள்ளி வயலின் ஒன்றைப் பரிசாக அளிக்கத் திட்டமிட்டிருந்தார் சபையின் காரியதரிசி ஆர். வேங்கடாசாரி. 'முத்தண்ணு' என்று அழைக்கப்பெற்ற வேங்கடாசாரி அந்தச் சபைக்குப் பல காலம் சிறப்பாகப் பணியாற்றியவர். அவருக்கு மன்னார்குடி சாம்பசிவனிடம் அளவு கடந்த அன்பு உண்டு; மதிப்பு உண்டு.

கச்சேரி நிகழ்ந்து கொண்டிருக்கையில் அந்த வெள்ளி வயலின் அவையில் உள்ள பிரமுகர்களின் பார்வைக்குச் சென்றிருந்தது. அதற்கு உரிய வில் மட்டும் சாம்பசிவன் வசம் இருந்தது.

வயலின், அன்பர்களின் பார்வைக்குப் பின் மேடைக்கு வந்து சேர்ந்தது. பரிசளிக்க வேண்டிய கட்டம். முத்தண்ணு சாம்பசிவனை நோக்கி, "எடு வில்லை" என்ருர். உடனே சாம்பசிவன், "இதை என் கையால் நானே செளடையா அவர்களுக்குச் சமர்ப்பிக்கிறேனே!" என்று கேட்டுக்கொண்டார். சாம்பசிவன் வில்லும் வயலினும் தாங்கி அரங்கில் வந்தார். செஞ்சுருட்டி ராகத்தில் பாடினார்:

"முடிவில் வந்துவிட்டார் முத்தண்ணு சொற்கேட்டு—இசை
மடுவில் குளித்தெழுந்தேன் மற்ருென்றும் இல்லை காண்
எடுவில் என்ருர் பயந்தேன், எளியதோர் வெகுமதியாம்
நடுவில் நானெருவனென்ன நகருகின்றேன் வந்தனம்."

இந் நிகழ்ச்சிக்குப் பின் முத்தண்ணுவுக்குச் சாம்ப சிவனிடம் உள்ள அன்பும் மதிப்பும் பலபடியாக அதி கரித்தன. அடிக்கடி புதிய சாகித்தியங்கள் இயற்றச் சொல்லிக் கேட்டு இன்புற்ருர் ; பரிசுகள் பல வழங்கினுர். அவற்றுள் மிகச் சிறந்த அகராதியும் ஒன்று. சாம்ப சிவன் அதை இன்றும் பொக்கிஷம் போல் போற்றி வருகிருர்.

சௌடையாவுக்கும் இந்த நிகழ்ச்சியிலிருந்து சாம்பசிவனிடம் அளவிறந்த அன்பு ஏற்பட்டது. மைசூர்ச் சம்ஸ்தானத்தில் அடுத்தடுத்துக் கச்சேரிகள் ஏற்பாடு செய்து கொடுத்து ஆதரிப்பதன் மூலம் அவர் தமது அன்பை வெளிப்படுத்திக் கொண்டார்.

இவ்விரு பெரியோர்களின் அன்பாலும் தூண்டுத லாலும் சாம்பசிவனிடம் இருந்த பாட்டியற்றும் புலமை மேலும் சுடர்விட்டுப் பிரகாசிக்கலாயிற்று. இதனுல் இவர் மேடைக் கச்சேரிகள் செய்வதுடன் புதிய புதிய சாகித்தியங்களை இயற்றுவதிலும் சத்கதா காலட்சேபம் செய்வதிலும் அக்கறை செலுத்தலானுர். கீதம், வர்ணம், கிருதி, பதம், ஜாவளி, தில்லாஞு, ராகமாலிகை—இப் படி, கச்சேரி நிகழ்ச்சிக்கு வேண்டியவைகளும், காலட் சேபங்கள், நாடகங்கள் இவற்றுக்குத் தேவையான உருப்படிகளும் நிரம்ப இயற்றத் தொடங்கினுர்.

*அறிவித்தவர் : மன்ஞர்குடி திரு. சாம்பசிவையர்.*

## 28. பாம்பின் ரசனை
(1938)

மாயூரம் துலாஉற்சவம் மிகவும் பிரசித்தமானது. அப்போது கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களின் சிறப்பு அங்கே ஓடுகிற காவிரிக்கு உண்டு என்பர். 'ஐப்பசிமாதம் துலாக் காவேரியாட அட்டாள தேசரும் வருகிறார்' என்று பழம்பாடல் ஒன்று உண்டு. உற்சவம் பத்து நாட்களிலும் பகல், இரவு இரு நேரங்களிலும் மயூரநாதர் ஆலயம், வள்ளலார் ஆலயம், ஐயாறப்பர் ஆலயங்களிலிருந்து பஞ்ச மூர்த்திகள் புறப்பாடாகி வீதிவலம் வருவது கண்கொள்ளாக் காட்சி! புகழ்பெற்ற நாகசுரவித்துவான்களின் மேளக் கச்சேரிகள் நடைபெறும். புண்ணிய நீராடவும், மூர்த்திகளைத் தரிசிக்கவும், மேளக்கச்சேரி கேட்கவும் பல ஊர்களிலிருந்து அங்கே அப்போது வந்து கூடுகிற மக்களின் எண்ணிக்கை கணக்கிலே அடங்காது.

வெளி இடங்களிலிருந்து எத்தனை ஜதை மேளங்கள் வந்திருந்தாலும் ஒவ்வோர் ஆண்டிலும் செம்பொன்னார் கோயில் சகோதரர்களின் நாகசுரக் கச்சேரி தவறாது. அவர்கள் தருமபுரம், திருவாவடுதுறை இரண்டு மடங்களிலும் ஆதீன வித்துவான்கள்.

1938-ஆம் ஆண்டு உற்சவம், நாலாம் நாள். முன் இரவு. மயூரநாதர் துலாக்கட்ட மண்டபத்திலிருந்து ஆலயத்திற்கு எழுந்தருளினார். தினசரி காலையில் ஆலயத்திலிருந்து எழுந்தருளும் மயூரநாதர் பட்டமங்கலவீதி வழியே காவிரிக் கரையை அடைந்து தீர்த்தம் கொடுத்துவிட்டுத் துலாமண்டபத்திலே தங்கியிருப்பார். இரவு அங்கிருந்து எழுந்தருளி மகாதான வீதிவழியே ஆலயத்தை அடைவார்.

அன்றிரவு. துலாக்கட்டத்தை ஒட்டிய கடை வீதி முகனையில் சுவாமி வந்தார். செம்பொன்னார் கோயில் கோவிந்தசாமி பிள்ளை - தட்சிணாமூர்த்தி பிள்ளை சகோதரர்கள் மல்லாரி வாசித்து வந்தார்கள். மல்லாரி வாசிப்பில் சிறப்பம்சங்கள் பல உண்டு. சங்கீத பரிபாஷையில் இதை 'நாட்டை வாசிப்பது' என்பர். சிறப்புடைய கலைஞர்கள் இதை வாசிக்கிறபோது பக்தர்கள், ரசிகர்கள் இரு சாரார்களின் உள்ளங்களிலும் உணர்ச்சி கொந்தளிக்கும்.

கடைவீதி முகனையில் சுவாமி நின்றதும் கோவிந்தசாமி பிள்ளை மல்லாரியை முடித்து வராளியை எடுத்தார். விஸ்தாரமாக வாசித்தார். பக்தர்களின் கண்ணும் கருத்தும் இசைக் கலைஞரிடம் பொருந்தி யிருந்தன. அப்போது...

கூட்டத்தில் குழப்பம். ஒருவரைப் பின்பற்றி ஒருவராக எல்லாரும் மேலே நோக்கினார்கள். உறுதியாக அமைக்கப் பெற்றிருந்த அந்தப் பெரிய கொட்டாரப் பந்தலின் பெரிய மூங்கில் விட்டத்திலே பெரிய சர்ப்பம்!

பரபரப்புடைய சிலர் அதைத் துரத்த முயன்றனர். அதனுடைய பெரிய படம் அனைவரின் உள்ளத்தையும் கலக்கிற்று. ஆனால்...

கோவிந்தசாமி பிள்ளை அனைவரையும் கையமர்த்தி விட்டுப் பொறுப்புடன் வாசிக்கத் தொடங்கினார்.

"'சிசுர்வேத்தி பசுர்வேத்தி வேத்திகான ரசம் பணீ' என்று கேட்டிருக்கிறோம்; இன்று நேரில் அதைக் காண்கிறோம்!"

"சரப சாஸ்திரிகள் புல்லாங்குழல் வாசிக்கிறபோது சில முறை இம்மாதிரி பாம்பு வந்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்."

“இசை முறை வழுவாது வாசித்தால் கேட்டுவிட்டுப் பேசாமல் போய்விடுமாம்; குற்றம் இருந்தால் பொட்டென்று போட்டுவிடுமாம்!”

“பாருங்களேன், குழலின் காற்றுத் திரும்புகிற திசையிலே படத்தைத் திருப்பித் திருப்பி அது ரசிக்கிறதை!...மெய் சிலிர்க்கிறதே!”

இப்படிச் சிலர் பேசிக்கொண்டனர்.

கோவிந்தசாமி பிள்ளை சிறப்பாக வராளியை வாசித்து முடித்தார்; வேறு ராகத்தை எடுத்தார்.

என்ன ஆச்சரியம்! சர்ப்பம் ஓடி மறைந்துவிட்டது.

‘கோவிந்தசாமி பிள்ளையின் வாசிப்பு இன்னாருடைய வாசிப்பைப் போன்றது’ என்றோ, ‘இன்னாருடைய வாசிப்பு கோவிந்தசாமி பிள்ளையின் வாசிப்பைப் போன்றது’என்றோ உவமையிட்டுக் கூறமுடியாத தனிச் சிறப்புடையது செம்பொன்னார் கோயில் கோவிந்தசாமி பிள்ளையின் நாகசுர இசை.

அறிவித்தவர் : செம்பொன்னார் கோயில் திரு. ராஜரத்தினம்பிள்ளை;
ஆமோதித்தவர் : சீர்காழி திரு. கே. சதாசிவம் பிள்ளை.

## 29. "அவ்வளவும் வீண்!"

(1940)

கர்நாடக இசை விளிகைக்கென்று அதிகத் தொகையைச் சம்மானமாகப் பெற்ற வெகு சில கலைஞர்களுள் ஜி. என். பாலசுப்பிரமணியம் முதல்வர். அந்த நாட்களில் முகூர்த்த காலங்களில் அவரைக் கச்சேரிக்கு அமர்த்தப் பலரும் போட்டி இடுவதுண்டு.

ரசிகத் தன்மையிலும் வளவாழ்விலும் மேம்பாடு உடைய பிரமுகர் ஒருவர் தம் பெண்ணுக்கு விதரணையாகத் திருமணம் நிகழ்த்தினர். அவர் ஜி. என். பி. யிடம் அளவுகடந்த அன்பும் அவர் இசையில் எல்லை கடந்த மோகமும் உடையவர்.

பள்ளிக்கூடக் கட்டிடம் ஒன்றில் வைபவம் நிகழ்ந்தது. மாலையில் வரவேற்பு; அப்பொழுது கச்சேரி; விளையாட்டு மைதானத்தில் விருந்து. பெரும்பாலரும் அங்கே குழுமி இருந்தனர். மாடியில் ஜி. என். பி. கச்சேரி செய்துகொண்டிருந்தார். அவையில் சில குழந்தைகள் கூச்சலிட்டு விளையாடிக்கொண்டிருந்தன; சில பெண்கள் சத்தமிட்டுப் பேசிக் கொண்டிருந்தனர்; இசையை ரசிப்பவர்களாகவும், ரசிப்பவர்கள் போலவும் ஒருசிலர் பரவலாக அமர்ந்திருந்தனர்.

கச்சேரி ஒலி, ஒலிபெருக்கி வழியே விருந்து நடைபெறுகிற இடத்திலே சென்று முழங்கிற்று; அங்கே எழுந்த பேச்சரவமும் சிரிப்பொலியும் கைதட்டலும் ஒலிபெருக்கி இன்றியே கச்சேரி மேடையிலே வந்து அலை அலையாய் மோதின.

உற்சாகத்தோடு பாட அமர்ந்த கலைஞருக்கு வர்ணம் பாடி முடிப்பதற்குள்ளாகவே உள்ளம் வாடிவிட்டது. அடுத்து இரண்டு மூன்று கீர்த்தனங்களைப் பாடினர்.



ராகம் பாட வேண்டும், ஸ்வரம் பாடவேண்டும் என்கிற ஆசையே இல்லை. நிறுத்திவிட்டு எழுந்து போய் விடலாமா என்ற அளவுக்கு மனத்தில் ஆயாசம் ஏற்பட்டுவிட்டது. அதன் விளைவாக சுமார் முக்கால்மணி நேரத்திற்குள்ளாகவே மிருதங்கத்திற்குத் தனி அளித்துவிட்டார்.

மிருதங்க வித்துவான் வாசித்துக்கொண்டிருந்தார். ஜி. என். பி. தலையைத் தூக்கி நாற்புறமும் நோக்கினார். ஆயாசம் மீதூர்ந்தது. அருகே இருந்த வயலின் வித்துவானிடம் சொன்னார்: "நம் மூவருக்குமாக ஏராளமான பணம் கொடுக்கப் போகிறார் இந்த வைபவம் நடத்துபவர். அவ்வளவும் வீண். அந்தப் பணத்திற்குச் சிறந்த அணிகலன் ஒன்றைச் செய்து மணப்பெண்ணுக்கு அணிவித்திருக்கலாம். அது நல்ல செயலாகும்; நிறக்க இருக்கும்."

இப்படிக் கூறிய பிறகுதான் தம் முன்னே ஒலி பெருக்கி இருக்கிற நினைவு அவருக்கு வந்தது. "அடடா!..." என்றார்.

அவர் எதிர்பார்த்தபடியேதான் நடந்தது. எங்கோ இருந்த வைபவ நிர்வாகி அங்கே விரைந்து வந்தார். "ஆயாசப்படாதே மணி. அநாவசியக் கூட்டம் கலைந்து விட்டது; அந்த ஆடம்பரச் செயல் முடிந்துவிட்டது. இதோ, நொடியில் நான் வந்துவிடுகிறேன்; இசை யார்வம் உடைய மற்றவர்களும் வந்துவிடுவார்கள். ஒரு மணிநேரம் வீணானாலும் மீதி நேரத்தில் நீ மனம் வைத்துப் பாடலாம்; நாங்களும் கேட்டு இன்புறுகிறோம்" என்றார்.

அவர் சொன்னபடியே நடந்தது. ஜி. என். பி. புதிய உற்சாகத்துடன், புதிதாகக் கச்சேரி தொடங்கியவர் போல் பாடலானார்.

*அறிவித்தவர்: திரு. ஜி. என். பாலசுப்பிரமணியம்.*

# 30. கல் விக்கிரகம்

**(1940)**

தேவகோட்டை சங்கர பாகவதருக்கு ஒரு சமயம் ஏராளமான காலட்சேபங்கள் தொடர்ந்து நடைபெற்றன. திருநெல்வேலியில் ஒருவார காலம்.

முடிவுநாளன்று காலட்சேப ஏற்பாடு செய்திருந்த பிரமுகர் ஏராளமான பொருளும் பொன்னுடை முதலியனவும் அளித்துக் கௌரவித்தார். அப்போது அறிஞர் ஒருவர் பாராட்டுரை வழங்கினார்.

"...சம்பிரதாய முறை வழுவாது கதை செய்வது சாதாரணம். சிறப்பான உவமான உவமேயங்களைக் கூறிப் பல்வேறு சுவைகளும் பொருந்த நீங்கள் கதைகளை நிகழ்த்தியதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். எங்கெங்கிருந்தோ கிளைக்கதைகளைப் பொழிந்தீர்கள். அதற்கு எவ்வளவு நூல் அறிவு வேண்டும்! சுருக்கமாக, ஒரே வார்த்தையில், தங்களைக் 'கல்விக் கிருகம்' என்றே கூறலாம்"—இப்படி அவர் கூறிக்கொண்டே போனார்.

சங்கர பாகவதர் இடைமறித்தார்.

"நீங்கள் அதிகம் புகழ்கிறீர்கள். 'கல்விக் கிருக'மாவது? எனக்கு அவ்வளவெல்லாம் யோக்கியதை கிடையாது. நான் வெறும் 'கல் விக்கிரகம்'தான்!"

அவையோர் இந்தச் சிலேடையை ரசித்துக் கரகோஷம் செய்தார்கள்; "பாகவதர் சிலேடைப் பேச்சில் சூரப் புலி!" என்று புகழ்ந்தார்கள்.

*அறிவித்தவர் : சென்னை திரு. ஆர். நீலகண்டன்.*

## 31. வெற்றி உரிமை

(1940)

அரியக்குடி ராமாநுஜ ஐயங்காரும் மைசூர் சௌடையாவும் ஓர் இடத்தில் நிகழ்ந்த கச்சேரிக்குப் பின் தமாஷாகப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

"பொதுவாக இசைக் கலைஞர்கள் தாம் விரும்புவதை எளிதில் பெற்றுவிடுவார்கள். அதில் நீங்கள் சூரர்தாம்" என்றார் சௌடையா.

"தடை என்ன? அந்த விஷயத்தில் எனக்கு ஒரு போதும் தோல்வியே ஏற்பட்டதில்லை" என்றார் ஐயங்கார், வெற்றிப் பெருமிதத்துடன்.

"ஆனைக்கும் அடி சறுக்கும்!"

"என் அகராதியில் அது இல்லை."

"அப்படியானால் ஒன்று செய்யுங்கள். இன்று பெண்கள் வரிசையில் முன்னணியில் அமர்ந்து உங்கள் பாட்டை ரசித்துக்கொண்டிருந்தார்களே ஓர் அம்மாள், அந்த அம்மாள் அணிந்திருந்த மரகதக்கல் மோதிரம் சுடர் விட்டுப் பிரகாசித்தது. அதைப் பெற்றுவிட்டால் நீங்கள் வெற்றி வீரர்தாம்!"

"நல்லது" என்றார் ஐயங்கார்.

மூன்றாம் நாள் மற்றொரு கச்சேரி. மேற்குறித்த கலைஞர்கள் மீண்டும் சந்தித்தனர்.

ஐயங்கார் ஆடம்பரமாக அமர்ந்திருந்தார். தாளம் இடுகிற பாவனையில் வலத் துடையிலே, வலக் கையை இருத்தி மெதுவாக, "சௌடையா!" என்று அழைத்தார்.

சௌடையா ஒரு நொடியில் விஷயத்தைப் புரிந்து கொண்டார். ஆனால் முகத்தை ஐயங்காரின் பக்கத்தில்

திருப்பாமலேயே, "என்ன?" என்று ஒன்றும் தெரியா தவர்போல் கேட்டார்.

"இதோ பார்!" என்ருர் ஐயங்கார்.

"எதோ பார்?"

அவர் புருவங்கள் உயர்ந்தன. ஐயங்கார் சிரித்தார்.

"எப்படி ஐயா முடிந்தது?"

"அது ஓர் இரகசியம்!"

"சொல்லுங்கள் சுவாமி, ரசிக்கிறேன்."

"அந்த அம்மாள் ஒரு பாடகி. பேச்சுக் கொடுத் தேன். 'முந்தா நாள் கச்சேரியில் நீங்கள் பாடின பதத்தை எனக்குக் கற்பிக்க வேண்டும்' என்ருர்கள். குரு தட்சிணையாக இதைக் கோரினேன்; கிடைத்துவிட்டது!"

"உண்மையாகவா?"

"பின்னே பொய்யா?......உம் உம். கச்சேரிக்கு நேரமாகிவிட்டது" என்ற ஐயங்கார் பளிச்சென்று வர்ணம் பாடத் தொடங்கினுர். உற்சாகமாக அவர் தாள மிட்டபோது மோதிரக் கல்லின் மரகதவர்ணம் பளிச்சிட் டது. சௌடையா உள்ளுக்குள் ஐயங்காரின் திறமை யைப் பாராட்டியபடி வாசிக்கலாஞர்.

அறிவித்தவர்: மைசூர் திரு. டி. சௌடையா.

# 32. கோபுரமும் தாஜ்மகலும்

**(1942)**

சென்னை கோகலே ஹாலில் செம்மங்குடி ஸ்ரீநிவா சையர் கச்சேரி. கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வயலின்; உமையாள்புரம்கோதண்டராமையர்மிருதங்கம்.

கச்சேரியின் நடுநிலை. வித்துவான் கரகரப்ரியா ராக ஆலாபனை செய்தார். வாய்ப் பாட்டு வித்துவான் களில் இந்தத் தலைமுறையில் ராகம் பாடுவதில் செம்மங் குடி ஸ்ரீநிவாசையருக்குத் தனி இடம் உண்டு. 'நாகஸ்வர பாணி' என்று ஒரு பாணி இருப்பதாகவும், அந்தப் பாணியில் பாடுவது சரியில்லை என்றும் வாதிப்பவர் ஒரு சிலர். ஆனால் மகாராஜபுரம் விசுவநாதையர், முடி கொண்டான் வேங்கடராமையர், முசிரி சுப்பிரமணிய ஐயர் முதல் மதுரை மணி ஐயர் வரையில் பெரும் பாலான புகழ்பெற்ற வித்துவான்கள் அனைவருமே உயர்ந்த மேளங்களை நிரம்பக் கேட்டே தங்கள் ஞானத்தை அபிவிருத்தி செய்து கொண்டதாகக் கூறு கிறார்கள்.

செம்மங்குடி ஸ்ரீநிவாசையர் இந்த அம்சத்தில் அனைவரையும் விஞ்சியவர். மற்றவர்கள் ஞானத்தை வளர்த்துக் கொண்டார்கள்; இவர் ஞானத்தையும் வளர்த்துக்கொண்டு அதைத் தம் ஆற்றல் மூலம் பரி மளிக்கவும் செய்துவிட்டார். அதனால்தான் அவருடைய ஆலாபனங்களில் அத்தனை சிறப்பு!

அன்றும் அப்படித்தான்; ஏறக்குறைய அரைமணி நேரம் மிகப் பிரமாதமாக ஆலாபனம் செய்தார். அடுத்து ராஜமாணிக்கம் பிள்ளை வாசிக்கவேண்டிய கட்டம்.

ஆனால் அவர் உடனே வாசிக்கவில்லை. ஒரு நிமிடம் இடைவெளி கொடுத்துப் பிறகே வாசிக்க ஆரம்பித்தார்.

அவையில் மைசூர் சௌடையாவின் மாணவர் வயலின் சேதுராமையா இருந்தார். அவர் அருகே இசை மாணவர் ஒருவரும் இருந்தார். "ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் ஏன் வித்துவான் பாடி விட்டதும் உடனே வாசிக்காமல் ஒரு நிமிடம் இடைவெளி கொடுத்துப் பின்னர் வாசித்தார்?" என்று அந்த மாணவர் கேட்டார்.

சேதுராமையா முறுவலித்தார். "ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களின் கலை வாழ்க்கையே அந்த ஒரு நிமிட இடைவெளியிலேதான் இருக்கிறது. கச்சேரி முடிந்த பின் விவரம் கூறுகிறேன்" என்றார்.

கச்சேரி முடிந்தது. ஆர்வமுள்ள மாணவர் அசட்டை யாக இருப்பாரா? சேதுராமையாவைத் துளைத்தெடுத்தார். இருவரும் பேசிக்கொண்டே வெளியே சென்றார்கள். அப்போது சேதுராமையா சொன்னார் :

"அந்த ஒரு நிமிட இடைவெளியிலே பிள்ளை அவர்கள் என்ன செய்தார் கவனித்தாயா? அவை யினரை நோக்கி முறுவல் புரிந்தார்; பின்னர் வித்து வானைப் பார்த்து லேசாகச் சிரித்தார்; பிறகு லாகவ மாகத் தந்திகளில் வில்லைப் பதித்து ஒரு கார்வை கொடுத்தார். அந்த அளவில் வித்துவானை நோக்கி னார்; அவர் 'சபாஷ்!' என்றார்.

"இது ஒரு நாடகம். போலியான நடிப்பன்று; உண்மை புதைந்த கலை நாடகம். கலைஞர்களுக்கும் ரசி கர்களுக்கும் இடையே பார்வை முதலிய ஒட்டுறவு வேண்டும். தலையைக் குனிந்து வாத்தியத்தையே பார்த்

துக்கொண்டு பாடகர் பாடி முடித்த சூட்டோடு பரபர வென்று பொறிந்து தள்ளினுல் எத்தனை உயர்வுடைய வாசிப்பானுலும் சோபையற்றுப் போய்விடும். மேற் குறித்த கலை நாடகத்திலுல் குறைவான ஆற்றலும் பரி மளித்துவிடும்; நிறைந்த ஆற்றலோ?

"ஸ்ரீநிவாசையர் மிகப் பிரமாதமாகச் செய்த ராக ஆலாபனத்தை ரசிகர்கள் நெஞ்சிலே அசைபோட அவ காசம் அளித்து, அந்த இடைவெளியிலே தம் ஆற்ற லுக்கு ஒரு முக்கியத்துவம் கொடுத்து, நன்ருக வாசித்து, ரசிகர் உள்ளத்திலே பாடகரோடு சம இடம் பெற்றுக் கொண்டார் பிள்ளை அவர்கள். இந்த ஒரு நிமிட இடை வெளி ரகசியம் பிள்ளை அவர்களிடம் எப்போதும் உண்டு. கலை வாழ்க்கையிலே அவர் உந்நத நிலையை அடைய இது மிக மிக முக்கியமான காரணம். என் குருநாதரிடமும் இம்மாதிரியான கலை நாடகங்கள் உண்டு. அதனுல்தான் பிள்ளை அவர்களைக் கோபுரம் என்றும் என் குருநாதரைத் தாஜ்மகல் என்றும் மேதைகள் புகழ்ந்து கூறுகிருர்கள்."

அறிவித்தவர்: திரு. வி. சேதுராமையா.

## 33. மிகுந்த பசி

*(1945)*

"மதுரையில் புதிதாக ஓர் அன்னதான சமாஜம் கட்டி யிருக்கிறார்கள். முந்தாநாள் அதற்குத் திறப்பு விழா" என்று அன்பர் ஒருவர் மகாராஜபுரம் விசுவநாதையரிடம் வந்து பத்திரிகைச் செய்தியைத் தெரிவித்தார்.

"பேஷ் பேஷ்! சத்திரத்திற்கு ஒரு திறப்பு விழா; அதற்கு ஓர் அமளி; அது பேப்பரிலும் வந்துவிட்டதல்லவா? அப்படியானால் அங்கே ஏழைகளுக்கு இடம் இல்லை!" என்றார் விசுவநாதையர்.

"ஏன் இப்படிச் சொல்கிறீர்கள்?"

"படாடோபமும் விளம்பரமும் உள்ள காரியங்களில் உண்மை மறைந்துதான் போகும். முன் காலங்களிலே எத்தனையோ தான தருமங்கள் நடைபெற்றன. வெளியிலே தெரியாமலே எல்லாம் நடக்கும், 'இடக்கை அறியாது வலக்கை அளிப்பது' என்பார்களே, அப்படி. மிகுந்த பசியோடு வருகிறவர்கள் வயிறாரச் சாப்பிட்டு வாயார வாழ்த்திச் செல்வார்கள். இந்த நாளைய தருமங்கள் அப்படி நடைபெறுவதில்லை. சத்திரம் என்று பேர்தான்; அங்கே 'பார்ட்டி'தான் நடக்கும். அன்னதானமாவது, சமாஜமாவது? 'மிகுந்த பசிக்கு' உணவு அளிக்க வேண்டுமே தவிர, 'மிகுந் தபசிக்கு' எதற்கு உபசாரம்?"

அன்பர் மேலே பேசத் தோன்றாமல் கும்பிடு போட்டு விடைபெற்றுச் சென்றார்.

*அறிவித்தவர்: மகாராஜபுரம் திரு. விசுவநாதையர்.*

# 34. என்ன? என்ன??

(1945)

தஞ்சை மாவட்டத்தில் உள்ள சேங்காலிபுரத்தில் பெரிய மிராசுதார் வீட்டுக் கல்யாணத்திலே கச்சேரி செய்வதற்காகக் களக்காடு ராமநாராயணையர் சென்னையிலிருந்து ரெயிலில் போய்க்கொண்டிருந்தார்.

விடியற்காலம் ரெயில் மாயூரம் நிலையத்தை அடைந்து நின்றது. பெரியவர் ஒருவர் வந்து ராமநாராயணையர் இருந்த பெட்டியில் ஏறினார். அவர் சிறந்த அறிவாளியாகத் தோற்றம் அளித்தார். அவர் ராமநாராயணையரைப் பற்றியும் அவர் செல்லும் அலுவல் பற்றியும் விசாரித்தார். தாம் சம்ஸ்கிருதத்தில் 'சாகித்திய சிரோமணி' என்பதை வெளியிட்டார். பாகவத கதாப் பிரவசனம் செய்வதில் தமக்குத் தனித் திறமை உண்டு என்றும் தெரிவித்தார்.

"உங்களுக்குச் சம்ஸ்கிருதத்தில் பயிற்சி உண்டா?" என்று அவர் ராமநாராயணையரைக் கேட்டார்.

"சுமாரான பரிசயம் உண்டு" என்றார் ராமநாராயணையர்.

"தியாகராஜ கிருதிகள் பெரும்பாலும் தெலுங்கிலே இருப்பதாகத் தெரிகிறதே! தனி ஸம்ஸ்கிருதத்தில் கிருதி ஏதாவது பார்த்திருக்கிறீரா?"

"'ஜகதானந்தகாரகா', 'நாததனுமனிசம்', 'ரகுபதே ராம', 'ஸுஜன ஜீவண', 'ஜானகிரமண'—இப்படிச் சில இருக்கின்றன. அந்த மகான் வாழ்ந்து சமாதி பெற்ற பஞ்சநத க்ஷேத்திரம் என்கிற திருவையாற்றிலே ஆண்டுதோறும் நிகழும் ஆராதனை விழாவில் அவர்

இயற்றிய பஞ்சரத்தினக் கீர்த்தனைகளை வித்துவான்கள் பாடுகிறார்கள். ஐயர் அவர்களின் எல்லாக் கீர்த்தனங்களுடைய சிறந்த பாவங்களும் பஞ்சரத்தினக் கீர்த்தனைகளில் அடங்கி யிருக்கின்றன. பக்தி, ஞானம், யோகம், உலகநீதி—இப்படி எத்தனையோ பாவங்கள். 'ஜகதானந்த காரகா'வும் பஞ்சரத்தினக் கீர்த்தனங்களில் ஒன்றுதான்.''

இப்படித் தொடங்கிய ராமநாராயணையர் தியாகராஜ கிருதிகளில் பொதிந்து கிடக்கும் பொருட் சிறப்புக்களை ஆவேசம் வந்தவர் போல் சொல்லிக்கொண்டே போனார்.

பெரியவர் பிரமித்தே போனார்.

''எனக்குச் சங்கீத பரிசயம் அதிகம் இல்லாததால் தான் இந்த மேன்மைகளை அறிந்துகொள்ள வாய்ப்பில்லாமலே போய்விட்டது. அடேயப்பா! தியாகராஜ கிருதிகளில் இத்தனை பொருட் செறிவா! நான் பாகவதப் பிரவசனம் பண்ணும்போது பல கிரந்தங்களிலிருந்தும், வேத, உபநிஷதங்களிலிருந்தும் உபமான உபமேயங்களை எடுத்துக் காட்டுவதுண்டு. இனி, தியாகையர் கிருதிகளிலிருந்தும் ஏராளமான மேற்கோள்களை எடுத்தாள முடியும் என்பதை இப்போது அறிகிறேன். நீங்கள் சொல்வதைக் கேட்கிறபோது தியாகராஜ கிருதிகளில் இல்லாத சிறப்புப் பொருள் வேறு எதிலுமே இல்லை என்றல்லா எண்ண வேண்டியிருக்கிறது! 'தியாகராஜ கிருதிகள்' என்பதைவிட, 'தியாகோபநிஷத்' என்பதே சாலப் பொருந்தும். இனி நீங்களும் அப்படியே குறிப்பிடுங்கள். என்ன?''

பிறகு நிகழ்ந்ததை ராமநாராயணையர் கூறுகிறார்:

"'சரி' என்றேன். இதற்குள் ரெயில் கும்பகோணம் நிலையத்தை அடைந்து நின்றது. நான் இறங்கினேன்; சிறிது தூரம் சென்றேன். திரும்பினேன். ரெயில் நகர்ந்தது. பின்னோடு நடந்தபடி, 'உங்களுக்கு எந்த ஊர்?' என்று கேட்டேன்.

"'பஞ்சநத க்ஷேத்திரம்!'

"'என்ன? என்ன? திருவையாறு?'

"என் கேள்வி அவர் செவிக்கு எட்டவில்லை. ரெயில் ஓடிற்று; நான் நின்றேன்" என்கிறார் ராமநாராயண ஐயர்.

அறிவித்தவர்; களக்காடு திரு. ராமநாராயணையர்.

## 35. கலையும் கடவுளும்!
### (1945)

'தற்போது நாங்கள் எடுத்துக்கொண்டிருக்கிற படத்திற்கு ஒரு பாட்டு அமைத்துத் தர வேண்டும். இத்துடன் சிறு தொகை முன் பணமாக வருகிறது. உடனே கிளம்பி வர வேண்டுகிறோம்' என்று கோயமுத்தூரிலிருந்து பாபநாசம் சிவனுக்கு அழைப்பு வந்தது. அவர் உடனே கிளம்பிச் சென்றார்.

கதையைச் சுருக்கமாகச் சொல்லி, இடம் பொருள் ஏவலைக் குறிப்பிட்டு எந்த இடத்திற்கு எந்த மாதிரி பாட்டு வேண்டும் என்று அறிவித்தார்கள். விவரம் முழுவதையும் மனத்திற்கு வாங்கிக்கொண்ட சிவன் இரவெல்லாம் சிந்தித்துப் பாட்டமைத்தார். மறுநாள் காலையில் உரியவரிடம் அதைச் சேர்த்தார்.

காலம் ஓடிக்கொண்டிருந்தது. பாட்டின் அங்கீகாரம் பற்றிய பேச்சே எழவில்லை. சிவன் பொறுமையை இழந்தார். சந்தர்ப்பம் அறிந்து உரியவரிடம் அதைப் பற்றிப் பேசினார். "பாட்டு, மெட்டு எல்லாம் ஏஒன்! ஆனால்... கடவுள் தொடர்புள்ளதாக இருக்கிறது. அவ்வாறன்றி அமைத்துத் தந்தால் நலம்" என்றார் அவர்.

"அது என்னால் ஆகாது!" என்ற சிவன் அன்றே கிளம்பிவிட்டார் சென்னையை நோக்கி.

அன்று அந்தப் பட முதலாளியால் நிராகரிக்கப் பெற்ற, 'இடது பதம் தூக்கி ஆடும்' என்ற கமாஸ் ராகப் பாடலை இன்று பெரிய பெரிய வாய்ப்பாட்டு வித்துவான்களும் வாத்திய வித்துவான்களும் மகிழ்ச்சியோடு இசைக்கிறார்கள்; ரசிகர்கள் விரும்பி ரசிக்கிறார்கள்.

அறிவித்தவர்: திரு. பாபநாசம் சிவன்.

## 36. எட்டாத இடத்திற்கு...

(1945)

செல்வர் ஒருவர் வீட்டுக் கல்யாணத்தில் கச்சேரி செய்ய வேண்டும் என்று மகாராஜபுரம் விசுவநாதைய ருக்கு அழைப்பு வந்தது. செல்வர் அவருக்கு மிகவும் வேண்டியவர்; தாராள மனமுடையவர்; இசை விளி கைகள் போன்ற அம்சங்களுக்கு ஏராளமாகச் சம்மானம் அளிப்பவர்.

விசுவநாதையருக்கு அப்போது உடல் நலமில்லை. தொண்டை பாறையாகக் கட்டிக் கொண்டிருந்தது. வேறு யாராக இருந்தாலும் சிந்தனை சிறிதும் இன்றிக் கச்சேரியை மறுத்துவிடுவார்கள். அவருக்குங்கூட அப்படிச் செய்வதிலே விருப்பந்தான். ஆனால் அவர் அழைப்பை ஏற்றுக்கொண்டதாகப் பதில் கொடுத்து விட்டார். காரணம், நிரம்பப் பண வருவாய் உண்டு என்பதன்று; அந்தச் செல்வர் தள்ளக் கூடாத நண்பர் என்பதுதான்.

"என்ன காரியம் செய்துவிட்டீர்கள்? பெயரைக் கெடுத்துக்கொள்ள ஆசையா? உங்களால் பேசவே முடியவில்லையே! பாடுவது எப்படி? வேண்டிய இடத் திலே பொல்லாப்புத்தான்!" என்று உரிமையோடு கடிந்துகொண்டார் அவருடைய நண்பர் டாக்டர் முத்து சாமி ஐயர்.

"கவலைப்படாதீர்கள். பேரைக் காப்பாற்றிக் கொண்டு விடுகிறேன். பகவான் கைவிடமாட்டார்" என்று அமைதியாகப் பதில் சொன்னார் விசுவ நாதையர்.

"எந்தத் தைரியத்தில் இப்படிச் சொல்கிறீர்கள்?"

"கச்சேரித் தேதிக்கு இன்னும் பதினைந்து நாட்கள் இருக்கின்றனவே!"

"அதற்குள் உடம்பு சீர் பெற்றுவிடும் என்கிறீர்களா? நாளுக்கு நாள் சீர்கேடு அல்லவா ஏற்பட்டு வருகிறது?"

"அந்தச் செல்வருக்கு என்னிடம் உள்ள மெய்யன்பு என் உடல் நிலையில் நலத்தை உண்டு பண்ணிவிடும். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறது. ஒரு வேளை நீங்கள் நினைக்கிறபடி குணம் ஏற்படாவிட்டாலும் பாதகம் இல்லை. எப்படியாவது சமாளித்துக்கொள்கிறேன்."

"அதுதான் எப்படி என்று கேட்கிறேன். சாரீரம் சிறிதாவது பேசினால்தானே?"

"அது பேசுகிற வரையில் பேசட்டும்; இல்லாவிட்டால் 'அந்த ஊரில் செய்த மாதிரி' செய்து விடுகிறேன்."

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"எட்டுகிற வரைக்கும் சாரீரம்; எட்டாத இடத்திற்குக் கை! என்னை யாருமே குறைகூற மாட்டார்கள்."

"எட்டாத இடத்திற்குக் கையா?"

டாக்டர் சிரித்துவிட்டார்.

# 37. பெருந்தன்மை

## (1947)

ஜகதீஷ் பிலிம்ஸார் 1947-இல் எடுத்த பக்தராமதாஸ் தமிழ்ப் படத்தில் களக்காடு ராமநாராயணையர் ராம தாசாக நடித்தார்; நெல்லூர் ராமகிருஷ்ணன் வரி வசூல் அதிகாரியாக நடித்தார். அவரும் சங்கீத வித்துவான்.

வைக்கோல் அடைக்கப் பெற்ற சிறைக்குள் இருக்கும் ராமதாசரை அவர் சாட்டையால் அடிக்க வேண்டும். அந்தக் காட்சியின் படப்பிடிப்புக்கு முதல் நாள் அவர் ராமநாராயணையரிடம் வந்தார். மிகவும் சஞ்சலப்பட்டுக் கொண்டார். ராமநாராயணையர் அவருக்கு ஆறுதல் கூறினார்.

படப் பிடிப்பு நடந்தது. பலமாகச் சாட்டையடி பட்ட ராமநாராயணையர் துவண்டு வைக்கோலில் விழுந்து விட்டார்; பிரக்ஞையை இழந்துவிட்டார். ஏவலன் தேநீருடன் வந்து அவரை எழுப்பினான். ஸ்டுடியோ நிர்வாகி எழுப்ப வேண்டாம் என்று தடுத்துவிட்டார்.

அலுவல் அனைத்தும் தீர்ந்து, அனைவரும் வெளியே சென்று, ஸ்டுடியோவை மூடும் நேரம் கடந்தும் நிர்வாகி பெருந்தன்மையுடன் காத்திருந்தார். வெகு நேரத்திற்குப் பின் ராமநாராயணையர் தாமாக உணர்வு பெற்று எழுந்தார். நிர்வாகி முகமலர்ச்சியுடன் அவரை அழைத்துச் சென்று அவருடைய இருப்பிடத்தில் சேர்த்தார்.

"அவரை என்றுமே என்னால் மறக்க முடியாது!" என்கிறார் ராமநாராயணையர்.

# 38. வாழ்க்கையில் ஒரு திருப்பம்

(1947)

அந்தி நேரம். சென்னை திருவல்லிக்கேணிக் கடற்கரை. கடலில் அலைகள் சீறிச்சீறி எழுந்து விழுந்து மடிகின்றன. கரையிலே அமர்ந்திருந்த இருபது வயது இளைஞரின் உள்ளத்திலும் எண்ண அலைகள் வேகமாக எழுந்து விழுந்து மடிந்து கொண்டிருந்தன. அதன் விளைவாக அவர் தமக்குத்தாமே என்னவோ முணுமுணுத்துக்கொண் டிருந்தார்.

"யாரப்பா நீ ? ஒதுக்குப்புறமான இடத்திலே உட்கார்ந்து தனக்குத்தானே பேசிக்கொள்கிறாயே ! என்ன சமாசாரம் ?" என்று கேட்டுக்கொண்டே பெரியவர் ஒருவர் அருகிலே வந்து அமர்ந்துகொண்டார். உள்ளத்திலே உள்ள துயரங்களையெல்லாம் கொட்டித் தீர்க்க இளைஞருக்குச் சரியான தருணம் வாய்த்தது.

"...குடும்பத்திலே பூர்விக சொத்து எதுவும் இல்லை. தகப்பனார் தள்ளாமையை அடைந்துவிட்டார். குடும்பமோ மிகப் பெரிது; வருமானமோ பூஜ்ஜியம். தாய், தகப்பனார், மூன்று சகோதரர்கள், ஆறு சகோதரிகள் எல்லோருக்கும் உணவு, உடை வசதிகள் வேண்டும். நான் இசை பயின்றவன். ஊரில் பிழைப்புக்குச் சரியான வழி இல்லை. சென்னை வந்தேன். மாம்பலத்தில் வாடகைக்கு அறை எடுத்துக்கொண்டு தங்கியிருக்கிறேன். ஒரு மாதம் ஆயிற்று. கைவசம் இருந்த சொற்பப் பணமும் செலவழிந்து, கைக் கடிகாரம் முதல் விற்றுச் செலவு செய்ததுதான் மிச்சம். இங்கும் ஒரு வழியும் புலன் ஆகவில்லை. மேலே என்ன செய்வது என்பதுதான் பிரச்னை !"

பெரியவருக்கு மிகவும் வேதனையாக இருந்தது.

" அப்படியானல் ஒன்று செய்; பாடுவேன் என்ருயே, வருகிற சனிக்கிழமையன்று இதோ, இந்த விலாசத்திற்கு வா. அங்கே பஜனை நடைபெறும். அதில் நீ பாடு. அதனல் நன்மை ஏற்படும்" என்று பெரியவர் ஒரு விலாசத்தைக் கொடுத்தார்.

சனிக்கிழமைப் பஜனையில் அந்த இளைஞரின் பாட்டைக் கேட்ட அன்பர்களில் சிலர், அடுத்த வாரத்தில் சிங்கராசாரி தெருவிலே உள்ள புரந்தரதாசர் பஜன மண்டலியிலே வந்து பாடும்படி அழைத்தார்கள்.

"பாடுவதைவிட நாகசுரம் வாசிப்பதில் எனக்கு ஆர்வமும் திறமையும் அதிகம். தயவு செய்து அதற்கு ஏற்பாடு செய்தால் நலம்" என்ருர் இளைஞர்.

" நாகசுரமா! அதற்குத் தவில் முதலியன வேண்டுமே! அதற்கெல்லாம் இப்போது வசதி இல்லையே !"

"வயலினும் மிருதங்கமும் இருந்தாலே போதும்."

" அப்படியா!..." அவர்கள் வியந்தார்கள்.

அடுத்த வாரத்தில் அதே முறையில் இளைஞரின் நாகசுரக் கச்சேரி நிகழ்ந்தது. மிகமிகப் பிரமாதம்! பெரியவர் சொன்னதுபோல் இளைஞருக்கு நல்லகாலம் தொடங்கி விட்டது.

அந்த இளைஞர் நாகசுர இசை உலகில் சுடரொளியாய்த் திகழ்ந்து மறைந்த வேதாரணியம் வேதமூர்த்திதான் !

*அறிவித்தவர் : வேதாரணியம் திரு. ஜி. வேதமூர்த்தி.*

## 39. கீழிடத்துச் சஞ்சாரம்

(1948)

ரெயில் புறப்படப் பத்து நிமிஷம் பாக்கி. இரண்டாம் வகுப்புப் பெட்டியில் அமர்ந்திருந்தார் ஆசிரியர் கல்கி. ஒருவர் அவசரமாக வந்து ஏறினர். கீழ் ஆசனத்தில் படுக்கையை விரித்தார். "இப்போது ஒருவர் வரப் போகிருர்; அவரால் மேல் ஆசனத்தில் படுக்க இயலாது. தயவு செய்து நீங்கள் மேல் ஆசனத்துக்குச் சென்ருல் நலம்" எனருர் கல்கி.

அந்த அன்பர் உடன்படவில்லை.

அடுத்த நிமிஷத்தில் ராஜமாணிக்கம் பிள்ளை வந்து வண்டியில் ஏறினர். அவரை ஏற இறங்கப் பார்த்த புதிய அன்பர், தமது படுக்கையைச் சுருட்டிக் கொண்டு மேல் ஆசனத்துக்குப் போய்விட்டார்.

வண்டி ஓடத் தொடங்கியது. கல்கி திடீரென்று சிரித்தார். ராஜமாணிக்கம், "என்ன?" என்று கேட்டார். கல்கி, "கச்சேரிகளில் பக்கவாத்தியம் வாசிக்கிற போதுதான் உங்களுக்கு மேலிடத்துச் சஞ்சாரம் அரிதாயிருக்கிறதே; இங்கே இந்த அன்பர் வலிய உங்களுக்கு மேலிடம் அளிக்கிருரே என்று ஒருநிமிஷம் மகிழ்ந்தேன். ஆனல் இவர் உங்களைப் பார்த்ததும் தாமாகவே மனம் உவந்து உங்களைக் கீழேயே விட்டுவிட்டு மேலே போய் விட்டார். ஆக, இங்கேயும் உங்களுக்குக் கீழ் இடத்துச் சஞ்சாரந்தான்" என்ருர்.

ராஜமாணிக்கம் இடிஇடியென்று சிரித்தார்.

அறிவித்தவர் : மதுரை திரு. மணி ஐயர்.

## 40. "எம். எஸ். ஸோ?"

**(1952)**

சென்னை அடையாற்றில் நடைபெற்றுவரும் கர்நாடக இசைக் கல்லூரியில் குமாரி ராதாவின் பரத நாட்டியம் நடைபெற்றது. ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லட்சுமி பதம் பாடினார்.

ஆசிரியர் கல்கி, திரு. டி. சதாசிவம், திரு. பெரியசாமித்தூரன், திரு. ஈ. கிருஷ்ணையர் முதலிய பல துறை மேதைகள் அவையில் குழுமியிருந்தனர்.

இடைவேளைக்குப் பின் கல்லூரியின் தலைவர் முசிரி சுப்பிரமணிய ஐயர் பாராட்டுரை வழங்கினார். ராதாவின் நடனம், எம். எஸ். ஸின் இசை இரண்டையும் புகழ்ந்து பேசுகையில் அவர் சொன்னார்:

"நான் வெளியூரில் ஓர் அன்பரைக் காணச் சென் றிருந்தேன். பலமான உபசாரம். அந்த வரிசையிலே எலுமிச்சம் பழரசம் கலந்த குளிர்ந்த பானமும் இடம் பெற்றிருந்தது. நான் அதை மறுத்தேன்; அன்பர் வற்புறுத்தினார். 'நான் பாடுகிறவன். தொண்டை கட் டிக்கொண்டுவிடும்; இது வேண்டாம்' என்றேன். என் னிடம் அளவு கடந்த உரிமையுடைய அவர் என்ன சொன்னார் தெரியுமோ? 'ஆமாம்!...பெரிய பாடகர்! பிரமாதமான சாரீரம்!...எம். எஸ். ஸோ?...' என்றார்..."

மேடையில் அமர்ந்திருந்த எம். எஸ். சட்டென்று நாணித் தலை கவிழ்ந்தார். அவையில் சிரிப்பொலியும், கைதட்டலும், மகிழ்ச்சிப் பேச்சும் வெகுநேரம் நீடித்தன.

நூலாசிரியர் நேரில் அறிந்தது.

## 41. மேல்!

**(1952)**

பம்பாய் அகாடமியில் கச்சேரித் தொடர். கர்நாடக இசைக் கலைஞர்கள் பலரும் அங்கே கூடியிருந்தார்கள்.

பிற்பகலில் சிற்றுண்டிக்குப் பின் ஜி. என். பால சுப்பிரமணியம், மதுரை மணி ஐயர், சில இளம் பக்கவாத்திய வித்துவான்கள் எல்லாரும் ஒருங்கு கூடி அமர்ந்து உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மகாராஜபுரம் விசுவநாதையர் தொண்டை அளவில் ஏதோ இசைத்தபடி, சிகையை விரலால் ஆற்றிக் கொண்டே அங்கே வந்தார். கட்டிடம் கிடுகிடுக்கும் பேச்சும் சிரிப்பும் அவரைக் கண்டதும் பொட்டென்று அடங்கிப் போயின.

எல்லாரும் தரையில் விரிப்பின் மீது அமர்ந்திருந் தார்கள். விசுவநாதையரும் அவர்களோடு விரிப்பிலே உட்கார வந்தார்.

ஜி. என். பி. அவர் செயலைத் தடுத்தார்.

மணி ஐயர், ''ஆமாம், நீங்கள் இங்கே உட்காருவது சரி இல்லை'' என்றார்.

''ஏன்?'' என்றார் விசுவநாதையர்.

ஜி. என். பி. அங்கே இருந்த நாற்காலியைக் காட்டினார்.

''நீங்கள் மேலாக இருக்கவேண்டும்'' என்றார் மணி ஐயர்.

''நான் எப்போதுமே 'மேல்' (male) தான்; மாறு பாடே கிடையாது!'' என்றார் விசுவநாதையர்.

அடங்கியிருந்த சிரிப்பொலி புதிய பிறவி எடுத்தது.

அறிவித்தவர்: மதுரை திரு. மணி ஐயர்.

## 42. ஒன்றுமே நிகழவில்லை

(1954)

கொல்லத்தின் அருகே உள்ள சவரை என்ற கிராமத்திலிருந்து வேதாரணியம் வேதமூர்த்திக்குக் கச்சேரி அழைப்பு வந்தது—தந்தியில். யாரோ சொன்னார்கள், அங்கே சிலர் நல்லவர்கள் இல்லை என்று. வேதமூர்த்தி தயங்கினார். அதிக 'ரேட்டு'க் கேட்டு மறுத்துவிட எண்ணினார். நான்குமணி நேரக் கச்சேரிக்கு ஆயிர ரூபாய் வேண்டும் என்று பதில் தந்தி கொடுத்தார்.

''எண்ணூறு தருகிறோம்'' என்றார்கள் அவர்கள்.

''முடியாது'' என்றார் இவர். ''தொள்ளாயிரம்'' என்று அவர்கள் மீளவும் கேட்டார்கள். வேத மூர்த்தி இசைவு அளித்துவிட்டார். எல்லாம் தந்தி மூலமே.

சவரைக்காரர்கள் முன் பணம் அனுப்பினார்கள். வேதமூர்த்தி எச்சரிக்கையோடு கிளம்பிச் சென்றார்.

வைபவம் நிகழ்ந்தது; கச்சேரி நடந்தது. 'எப்போது என்ன நிகழுமோ' என்று வேதமூர்த்தி விழிப்புடனேயே இருந்தார். 'அன்பளிப்பு ஒழுங்காகக் கிடைக்கவேண்டுமே' என்று கவலைப்பட்டார். ஆனால்...

ஒன்றுமே நிகழவில்லை. கனிவர்க்கங்களோடு ஆயிர ரூபாயை வைத்து அளித்தார்கள். அது மட்டுமா? கொல்லம் வரை தக்க ஆசாமியை அனுப்பி வழியனுப்பினார்கள்.

'கண்டவர் பேச்சைக் கேட்டு மறுத்திருந்தால்?...' என்று எண்ணி எண்ணி உள்ளம் கசிந்தார் வேத மூர்த்தி. அதுமுதல் அவர் எவர் பேச்சையும் கேட்பதில்லை.

அறிவித்தவர் : வேதாரணியம் திரு. ஜி. வேதமூர்த்தி.

## 43. முக்கூடல்

### (1955)

சென்னை மயிலையில் சிறப்பாக நடைபெற்று வரும் தியாகராஜ சங்கீத வித்துவத் சமாஜத்தில் ஆண்டு தோறும் பகுள பஞ்சமியின்போது ஆராதனை விழா சிறப்பாக நடைபெறும். பூஜை, ஆராதனை, அன்ன தானம், இசை நிகழ்ச்சிகள் எல்லாம் உண்டு. பிரமுகர் களும் கலைஞர்களும் கலந்து பணியாற்றுவார்கள்.

அந்த ஆண்டிலும் வழக்கம்போல் பெரிய வித்து வான்களும் இளம் வித்துவான்களும் கலந்து இசைப் பணி புரிந்தார்கள். செம்பை, மகாராஜபுரம்—இப்படிப் பலர்.

புல்லாங்குழல் வித்துவான் டி. ஆர். மகாலிங்கம் எதிர்பாராவிதம் வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்ததும் செம்பை பாகவதர், "நீ வாசிக்கப் போகிறாயா?" என்றார்.

"வாசிக்கிறேன்" என்றார் மாலி.

"நான் பக்கவாத்தியம் வாசிக்கட்டுமா?"

"செய்யுங்கள்" என்று மாலி சிரித்தார்.

"என் பங்கு சோடையா?" என்றார் மகாராஜபுரம்.

"நான் பிடில்; நீங்கள் மிருதங்கம்; சரிதானே?"

விசுவநாதையர் இணக்கமாகத் தலை அசைத்தார். கூடியிருந்த மக்களிடையே ஒரே பரபரப்பு!

சற்று நேரத்தில் கலைஞர்கள் அரங்கில் அமர்ந் தார்கள். விளையாட்டான பேச்சு முழுக் கச்சேரியாக உருப்பெற்றது. மறக்க முடியாத நிகழ்ச்சியல்லவா? அவர்களை அப்படியே—செயலாற்றுகிற முறையில்— படம் எடுத்தார்கள். இன்றும் அந்தப்படம் சமாஜ அலுவலகத்தில் காட்சி அளிக்கிறது.

## 44. 'பஸ்ட் அண்டு லாஸ்ட்!'

**(1955)**

மகாராஜபுரம் விசுவநாதையர் கச்சேரியை முன்னிட்டுப் பம்பாய் சென்றிருந்தார். அவர் ஆகாய விமானத்தில் வந்ததாக யாரோ கதைகட்டிவிட்டார்கள். பலகாலம் பழக்கமுடைய நண்பர்கள் இருவர் அவரைக் காணவந்தார்கள். எடுத்த எடுப்பிலேயே ஒருவர், "நீங்கள் 'ப்ளேன்மேன்' ஆகிவிட்டீர்களாமே!" என்று சிரித்துக்கொண்டே கேட்டார்.

"இது என்ன புதுக் கேள்வி? நான் எப்போதுமே 'ப்ளெய்ன்மேன்' தானே?" என்றார் விசுவநாதையர்.

மற்ற நண்பர், "அதுசரி, நீங்கள் சென்னையிலிருந்து ப்ளேனில் வந்தீர்களாமே, அதைப்பற்றிக் கேட்கிறார் அவர்" என்று விளக்கம் கூறினர்.

விசுவநாதையர், "ஓகோ...அதுவா?......" என்றார்.

"இதுதான் 'பஸ்ட்டை'மோ?"

"இல்லை; இதுதான் 'லாஸ்ட்டை'ம்."

"அப்படியா? எங்களுக்குத் தெரியாதே! இதற்கு முன் எத்தனை தடவை ப்ளேனில் போயிருக்கிறீர்கள்?"

"போனதே இல்லை; இதுதான் 'பஸ்ட்'டைம்."

"பின்னே 'லாஸ்ட்டை'ம் என்றீர்களே?"

"ஏன்? 'பஸ்ட்டை'மே 'லாஸ்ட்டை'மாக இருக்கக் கூடாதா? நடக்காத காரியத்திற்குத் தடவையின் எண்ணிக்கை ஒரு கேடா? எல்லாம் வெறும் புரளி! ப்ளேனில் ஏறும் தைரியம் எனக்கிருந்தால் நான் ஏன் கச்சேரி மேடையில் நங்கூரம் இடுகிறேன்?"

நண்பர்கள் நீண்ட நேரம் நினைத்து நினைத்துச் சிரித்தார்கள்.

# 45. இளமை நினைவுகள்

(1955)

திருவீழிமிழலைச் சகோதரர்களில் மூன்றுமவரான கல்யாணசுந்தரம் பிள்ளை சென்னைக்கு வந்திருந்தார். தம் குருநாதரான காஞ்சீபுரம் நாயனுபிள்ளை அவர்களின் புகைப்படப் பிரதி ஒன்றின் விஷயமாக அவர் டி. சங்கரன் அவர்களைக் காண விரும்பினுர்.

அப்போது சென்னை ரேடியோ நிலையத்தில் உதவி டைரெக்டராகப் பணியாற்றி வந்த சங்கரன் சாந்தோம் கடற்கரை அருகிலுள்ள லலிதா நகரில் வசித்துவந்தார்.

அவர் இணையற்ற வீணுகான மேதை தனம்மாளின் பெயரர்; இசைக் கலையிடத்தும் கலைஞர்களிடத்தும் அளவு கடந்த பற்றுதல் உடையவர். எனக்கும் பரிசயமானவர். ஆகவே, கல்யாணசுந்தரம் பிள்ளையோடு நானும் சங்கரன் இல்லத்திற்குச் சென்றேன்.

காலைநேரம். சங்கரன் வெளியே சென்றிருந்தார். அவருடைய பெரிய தாயார் ராஜலட்சுமி அம்மாள் அன்புடன் வரவேற்றுப் பேசினுர்.

கல்யாணசுந்தரம் பிள்ளையிடம், "உங்களுக்கு எந்த ஊர்?" என்று அவர் கேட்டார்.

"திருவீழிமிழலை."

"திருவீழிமிழலையா?... உங்கள் பெயர்?"

"கல்யாணசுந்தரம்... என்னைத் தெரியவில்லையா? காஞ்சீபுரத்தில் நீங்கள் சிட்சை பயின்றபோது..."

" ஆ... ஆமாம், ஆமாம்;... இப்போது நினைவு வருகிறது."

“அப்போது நீங்கள் ‘குட்டி.’ அப்படித்தானே உங்களைச் செல்வமாக அழைப்பார்கள்?”

“ஆமாம். நீங்களும் அப்போது ‘பையன்’தானே?”

இருவரும் கலகலவென்று சிரித்துக்கொண்டார்கள்.

# 46. இக்காலத் தபஸ்!

**(1956)**

மருத்துவ நிபுணர் எம். எஸ். ராமசந்திரன் குழந்தைக்கு ஆண்டு நிறைவு. நாலு பெண்களுக்குப் பின் தோன்றிய ஆண் மகவு. அதனால் விழாவை மிக ஆசையோடு சிறப்பாக நடத்தினர். சென்னை ஆள்வார்ப் பேட்டையை அடுத்த ஸ்ரீராம் நகரில் விழா நடந்தது.

வைபவம் நிறைவேறும் தறுவாயில் பாபநாசம் சிவன் அங்கே வந்தார். "உங்கள் ஆசியுடன் ஆரம்பம் செய்யவேண்டும் என்று எனக்கு ஆசை. ஏன் இவ்வளவு தாமதம்?'' என்று ராமசந்திரன் கேட்டார்.

சிவன் பதில் சொல்லுமுன் அருகே இருந்த அன்பர்களில் ஒருவர், "தவருமல் இந்த இடத்திற்கு வரக்கூடியவராயிற்றே; உடம்பு சரியில்லையோ என்னவோ என்று நினைத்தேன்'' என்ருர்.

உடனே மற்ருேர் அன்பர், "அவர் உள்ளம் பக்தி மயமானது அல்லவா? பஜனை, பூஜை, பக்தி, தவம்— முதலிய வழிபாடுகளில் ஈடுபட்டிருக்கலாம்'' என்ருர்.

சிவன் சிரித்தார். "நீங்கள் சொன்னது சரிதான். தபஸ் செய்துகொண் டிருந்தேன்'' என்ருர்.

எல்லோரும் வியப்புடன் அவரையே நோக்கினர்கள்.

சிவன் மறுபடியும் சொன்னர்.

"ஏன்? நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா? இந்தக் காலத்தில் தபஸ் என்பது சர்வ சாதாரணம். முன்காலத்திலே பக்திக்குத் தபஸ்; இந்தக் காலத்தில் பஸ்ஸுக்குத் தபஸ்!''

எல்லாரும் சிரித்தார்கள்; டாக்டரும் சிரித்தார்.

அவர் மடியில் இருந்த குழந்தையும் மற்றவர்கள் சிரிப்பதைப் பார்த்து, காதுகுத்தின வலியையும் மறந்து கை கொட்டிச் சிரித்தது.

நூலாசிரியர் நேரில் அறிந்தது.

## 47. "அதிருஷ்டம் அதிஷ்டத்துக்குத்தான் வரும்!"

(1957)

மயிலேயில் நடைபெற்ற ஷண்முகானந்த சபாவில் கச்சேரிக்கு ஏற்பாடு செய்வதற்காக அரியக்குடி ராமாநுஜ ஐயங்காரைக் காணச் சென்றிருந்தேன். அவரிடம் அன்பர் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

"நாலுவேதமும் ஆறு சாத்திரமும் தெரியும்; வாய் மட்டும் ஊமை என்பது போல் இருக்கிறது அவன் விஷயம். எவ்வளவோ பேர் அநுதாபத்தோடு அவனே ஆதரிக்கத்தான் செய்கிருர்கள். அவனது திறமையிலும் ஒரு குறையும் இல்லே. என்ன இருந்து என்ன? பைய னுக்கு அதிருஷ்டம் இல்லே. என்றைக்குத்தான் அவ னுக்கு அந்த அதிருஷ்டம் வருமோ?"

அந்த அன்பர் யாரோ ஒருவரைப்பற்றி இப்படி மிகுந்த அங்கலாய்ப்புடன் பேசினுர்.

"இதோ பாருங்கள் ஸ்வாமி, இந்தக் காலத்தில் மனிதன் அநேகமாக எல்லாவற்றையுமே தன் இஷ்டத் திற்குச் செய்து முடிக்கிருன். ஆனுல் எந்தக் காலத்தி லுமே அதிருஷ்டம் என்ற அம்சத்தை எவரும் தம் இஷ்டத்திற்கு அடைந்ததில்லே. அது மட்டும் அதன் இஷ்டத்திற்குத்தான் வரும். அதிருஷ்டம் அதிஷ்டம்—அதன் இஷ்டம் தான்!"

வருத்தமாகப் பேசிக் கொண்டிருந்தவர் கூடத் துயரத்தை மறந்து ரசித்துச் சிரித்துவிட்டார்.

## 48. "என்னமோ கன ராகம்!"

(1957)

சென்னை தியாகராயநகர் கிருஷ்ணகான சபாவில் மகாராஜபுரம் விசுவநாதையர் கச்சேரி. அன்று அவையில் இட நெருக்கடி. அதிலும் இசையறிந்த ரசிக மேதைகளின் எண்ணிக்கை மிக அதிகம்.

மேடை ஏறிய நாள் முதல் விசுவநாதையரின் இசையிலே தொடர்ந்து வளர்ந்து வந்த தனிச் சிறப்புக்கள் சில உண்டு. அவை அவருக்கே உரியவை. குறிப்பாக, மோகனம், தர்பார், ஆரபி முதலிய சில ராகங்களை அவரிடம்தான் கேட்க வேண்டும் என்று பலர் சொல்வார்கள்.

அன்று அவருடைய கச்சேரி முதல் தரமாக அமைந்தது. எல்லா ராகங்களையுமே சிறப்பாகத்தான் பாடினார். அனைத்திலும் மோகனம் மிகமிகப் பிரமாதம்!

கச்சேரி முடிவில் பிரமுகர் ஒருவர் கலைஞருக்குப் பாராட்டுரை வழங்கினார்.

"...இதுவரை எத்தனையோ முறை இவர் மோகனம் பாடிக் கேட்டிருக்கிறேன். ஆனால் இன்று இவர் பாடிய மோகனத்தை எப்படிப் பாராட்டுவது என்றே எனக்குத் தோன்றவில்லை. ஆகா!...அது மனமோகனம் தான்!..."

விசுவநாதையர் பதில் உரைத்தார்:

"இந்த அன்பர் என்னிடம் உள்ள அளவிறந்த அன்பினால் இவ்வளவு புகழ்கிறார். அப்படி என்ன மோகன ராகம் பாடினேன்?....என்னமோ கனராகம் பாடினேன்!..."

வானளாவிய கரகோஷத்தினிடையே, "மோகன ராகத்தை விட இந்த 'என்னமோ கனராகம்' பிரமாதம்! பிரமாதம்!" என்ற சொற்கள் ஊடுருவின.

அறிவித்தவர்: ஆலக்கிராமம் திரு. எஸ். ராமசந்திரன்.

## 49. நல்லவர்!

(1957)

சென்னை தியாகராய நகர் வாணிமகாலில் ஓர் இளம் பாடகியின் கச்சேரி. அழைப்பின்பேரில் மகா ராஜபுரம் விசுவநாதையர் வந்திருந்தார்.

சிறிது நேரம் சென்றது.

"மிருதங்கம் வாசிப்பவர் யார்?" என்று அருகே இருந்தவர்களிடம் விசுவநாதையர் கேட்டார். "தெரிய வில்லை" என்று சிலர் சொன்னார்கள். பின்புறம் இருந்த அன்பர் மிருதங்கக்காரரின் பெயரைச் சொன்னார்.

"ஓகோ! மிகவும் நல்லவர்!"

"எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?"

"பார்த்தாலே தெரிகிறதே, மிகவும் சாது என்று?"

"அதுதான் எப்படி என்று கேட்கிறேன்."

"பிறர் ஜோலிக்கே போகாதவர் என்று நன்றாகத் தெரிகிறதே. பாருங்கள், அவர்பாட்டுக்கு வாசித்துக் கொண்டே இருக்கிறார்!"

"பின்னே, எல்லாரும் என்ன செய்வார்கள்? பாடு கிறவர் பாடுவதும், வாசிப்பவர் வாசிப்பதும் முறை தானே?"

"அதுசரி. ஆனாலும் இவர் மிகவும் நல்லவர். 'அவர் பாட்டுக்கு' வாசித்துக்கொண்டே போகிறார்; 'அவள் பாட்டுக்கு' வாசிக்கவே இல்லை!"

குபீரென்று சிரிப்பொலி எழுந்தது. எல்லாரும் இங்கேயே கவனித்தார்கள்; விவரம் புரியாமல் திகைத் தார்கள்.

நூலாசிரியர் நேரில் அறிந்தது.

# 50. வில்வீரரும் சொல்வீரரும்

(1958)

வயலின் வித்துவான் கும்பகோணம் ராஜ மாணிக்கம் பிள்ளையை என் இல்லத்திற்கு விருந்துக்கு அழைத்திருந்தேன். சந்தர்ப்பம் அநுமதித்த மற்றும் சிலரையும் அழைத்திருந்தேன்.

கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன், அமுத நிலையத் தலைவர் ரா. ஸ்ரீ. ஸ்ரீகண்டன், சங்கீத வித்து வான்கள் ஏளக்காடு ராமநாராயணையர், கீரனூர் மு. ராம சாமி பிள்ளை, சங்கீத மாணவ மாணவிகள் கே. எல். ரங்கநாயகி, பி. எஸ். தியாகராஜன், திருவெண்காடு ஜயராமன் முதலிய பலர் வந்திருந்தார்கள்.

விருந்துக்குப் பின் ராஜமாணிக்கம் பிள்ளையின் வரலாற்றை நான் படித்தேன்; அங்கங்கே அவர் தந்த குறிப்புக்களை இணைத்தேன்.

'யானைப் பரிசில்' என்ற அத்தியாயத்தில் முன்னர் கிடைத்த செய்திகளைச் சுருக்கமாக எழுதியிருந்தேன். அதைப் படிக்கக் கேட்டதும் பிள்ளை மெல்லச் சிரித்தார்.

"'காசிக்குப் போனன்; கங்கையைக் கொணர்ந் தான்' என்பதுபோல ரத்தினச் சுருக்கமாக அமைந் திருக்கிற இந்த அத்தியாயத்துக்குள் இன்னும் பல விவரங்கள் இருக்கின்றன" என்றார். எங்கள் வேண்டு கோளுக்கிணங்கி அவைகளைச் சொல்லும்போது அவர் பல சிலேடைகளையும் ஹாஸ்யங்களையும் உதிர்த்துக் கொண்டே வந்தார்.

"ஓ! நீங்கள் வில்லைத்தான் பிரமாதமாக ஓட்டு வீர்கள் என்று நினைத்தேன்; சொல்லையும் வெகு லாகவ மாகப் பிரயோகிக்கிறீர்களே! நீங்கள் வில்வீரர்மட்டும் இல்லை; சொல் வீரரும்கூட!" என்று கி. வா. ஜ. வியந் துரைத்தார்.

## 51. மந்தவெளி !

(1959)

ஏதோ அலுவலாக நுங்கம்பாக்கத்திலிருந்து மயிலாப்பூர் சென்ற மகாராஜபுரம் விசுவநாதையர் லஸ்ஸில் உள்ள பஸ் நிறுத்தத்தில் நின்றிருந்தார். அந்தப் பக்கம் வந்த நான் வணக்கம் செலுத்திவிட்டு, "பஸ்ஸுக்கா?" என்றேன்.

"ஆமாம். வந்த காரியம் ஆகிவிட்டது; திரும்பிப் போகிறேன்."

"பஸ்ஸிலேயா ?"

"பின்னே? யாராவது அழைத்து வந்தால் வரப் போகக் காராகவே இருக்கும். நானாக வந்தால் பஸ்ஸில் தானாகப் போகவேண்டியதுதானே? "

நாங்கள் பேசிக் கொண்டிருக்கையில் இளம் இசைக் கலைஞர் ஒருவர் அங்கே வந்தார். அவர் விசுவநாதையருக்கு வணக்கம் செலுத்திவிட்டு மரியாதைப் பாவனையில் அவருக்குப் பின்புறம் நின்றார். அவருடைய நலனைப் பற்றியும் தொழில்துறை நிலைபற்றியும் வினவிய விசுவநாதையர், "உன் ஜாகை எங்கே?" என்று கேட்டார்.

"மந்தவெளியில்" என்றார் இளம் கலைஞர்.

விசுவநாதையர் சட்டென்று அவர் பக்கம் திரும்பினார். "அட பாவமே!" என்றார்.

"ஏன் ?...என்ன?...' என்று திகைப்புடன் கேட்டார் இளைஞர்.

"ஒன்றும் இல்லை; நம்மிடந்தான் சுறுசுறுப்பு மருந்தாக இருக்கிறதே, குடியிருக்கிற இடமுமா மந்த வெளியாக இருக்க வேண்டும்?" என்பதுதான் என்றார் விசுவநாதையர்.





## 52. 'சாந்தோம்'

(1960)

சென்னை ஹைதர்யநாத பாகவதரைப் பார்த் வரலாமென்று 11—12—60 ஞாயிறு மாலை அவர் இல்லத்திற்குச் சென்றேன். மயிலை சாந்தோம் கடற்கரையின் அண்மையில் உள்ள லலிதா நகரில் அவர் வீடு

சிறிதுநேரம்பேசிக்கொண்டிருந்தபின், "சில கால சென்னையில் தங்குவதாக உத்தேசம் உண்டோ!" என் கேட்டேன்.

"சிலகாலம் என்ன? இனிமேல் இங்கேயேதான் என்று அழுத்தமாகச் சொன்னார் பாகவதர்.

எனக்கு வியப்பாக இருந்தது. "முன்னெல்லாம் உங்களுக்கு இங்கே இருப்பதைவிடக் கிராமத்தில் போய் இருப்பதிலேதான் விருப்பம் அதிகம் இல்லையா?" என்றேன்.

"அது உண்மைதான். ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. கிராமத்தில் மன அமைதி கிட்டவில்லை அதற்குப் பல காரணங்கள். சகோதரன், சகோதரி குடும்பங்கள் அங்கே வாழ்ந்து வருகின்றன. நான் சாந்தத்தை நாடி இங்கே சாந்தோமுக்கு வந்து விட்டேன். இது சாந்தமான ஹோம் (Home) தானே" என்றார் பாகவதர்.

